சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை – 4



# மருதநிலப் பெண் தெய்வங்கள்

பிடாரி
வராகி
தவ்வை

(ஆன்மீகம் இதழில் வெளிவந்தவை)

**Female Goddesses of Riverside Agriculturists**

முனைவர் செ. இராஜேஸ்வரி





சந்திரோதயம் பதிப்பகம், மதுரை.

*சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை - 4*

# மருதநிலப் பெண் தெய்வங்கள்

**முனைவர் செ. இராஜேஸ்வரி** M.A., M.Phil., Ph.D.,



சந்திரோதயம் பதிப்பகம், மதுரை.

*Mob. : 7010997639*

**Tamil Heritage Foundation International**

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் வரிசை | : | சமூகப் பண்பாட்டு ஆய்வு நூல்வரிசை - 4 |
| நூலின் பெயர் | : | மருதநிலப் பெண் தெய்வங்கள் |
| துறை | : | சமூகப் பண்பாட்டு ஆய்வு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/422, திருவள்ளுவர் தெரு<br>தினமணி நகர், மதுரை – 625 018 |
| பதிப்பு | : | 2020 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 126 |
| விலை | : | Rs.200/- |

\- - - - -

| | | |
|---|---|---|
| Book Series | : | A Series of Socio Cultural Study Series–4 |
| Book | : | Maruthanila Penn Theivankal |
| Subject | : | Socio Cultural Studies |
| Author | : | Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D., |
| Designer | : | C. Meenatchi |
| Publisher | : | Chandrothayam Pathippagam<br>3/422, Thiruvalluvar Street<br>Dinamani Nagar, Madurai – 625 018 |
| Publish | : | 2020 |
| Pages | : | 126 |
| Price | : | Rs.200/- |

# அன்புக் காணிக்கை



*சர் ஜேம்ஸ் பிரேசர் நூலை எனக்கு அறிமுகம்*
*செய்து நாட்டார் தெய்வங்களைப் பற்றி*
*அறிவதிலும் ஆய்வதிலும் ஆர்வம் கொள்ளத்*
*தூண்டுதலாக விளங்கிய என் இனிய அறிவுசால்*
*கெழுதகை நண்பர், கோவை,*
*பாரதியார் பல்கலைக் கழக தமிழ்த்துறைத்*
*தலைவர்* **பேரா. முனைவர் தே. ஞானசேகரன்**
*அவர்களுக்கு இந்நூல்*
*அன்புக் காணிக்கை!.*

**Tamil Heritage Foundation International**

## அணிந்துரை



**கிருஷ்ணா**
பொறுப்பாசிரியர்
ஆன்மிகம்

தெய்வங்கள், புராணங்கள், வரலாறு எனும் இம்மூன்றையும் ஒரே நேர்க்கோட்டில் ஆராய்வதென்பது சவாலான வேலை. ஆன்மீகவாதிகளிடம் வரலாறு சம்மந்தமாக பேசுவதென்பது கேட்போரின் ஆர்வம் சார்ந்தது. பெரும்பாலான ஆன்மீகவாதிகள் வரலாற்றை பெருமை மிக்க மன்னர்களின் வீர வரலாறு என்றும், பழைமையான ஆலயம் எனும் பிரமிப்போடும் மட்டுமே பார்த்துவிட்டு நகர்ந்து விடுவார்கள். கோயில் என்பது அவர்களைப் பொறுத்தவரை பிரார்த்தனைக்கூடம் அவ்வளவே. ஏன், புராணங்களைக்கூட ''ஏதோ அந்தக் காலத்துல பெரியவங்க எழுதி வச்சிருக்காங்க'' என்கிற பொது நம்பிக்கையை ஐதீகமாக வைத்துக் கொள்வார்கள். ஏன் இந்த புராணம். இந்தப் புராணத்தின் பொருள் என்ன

என்பனவற்றைக் குறித்த தேடல்கள்கூட குறைவாகவே இருக்கும்.

இன்னொரு பக்கமான வரலாற்று ஆராய்ச்சியாளர்களிடம் புராணங்கள் குறித்த மெல்லிய கேலியை பார்க்கலாம். முழுவதுமாக அல்ல. அவர்கள் இழிவு செய்யமாட்டார்கள். ஏனெனில், அவர்களின் முதன்மை ஆர்வம் என்பது அரசர்களின் ஆட்சியாண்டு குறித்தும், சிற்ப அமைதி குறித்துமே பெரும்பாலும் பேசுவார்கள். அவர்களிடையே கடவுள் குறித்த நம்பிக்கை இருந்தாலும், புராணங்கள் குறித்த நுட்பங்கள் புரிபடாமல் தொட்டும் தொடாமலும் செல்வதைப் பார்த்திருக்கின்றேன். இன்னும் விரிவாகச் சொன்னால் தத்துவங்களோடு புராணத்தை பார்ப்போர் மிகமிக அரிதாக இருப்பார்கள். புராணங்கள் என்பது காலத்தினால் கணிக்க முடியாத தொன்ம வரலாறு என்பதை ஏற்றுக்கொள்வதில் அவர்களுக்கு சங்கடங்கள் உண்டு. ஆனால், தெய்வங்கள், புராணங்கள், வரலாறு, இந்த மூன்றையும் ஒரே சரடில் கோர்த்து இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகளையும் ஒற்றுமைகளையும் அநாயாசமாக ஆராயும் திறமை பெற்றவராக விளங்குகிறார், முனைவர் செ. இராஜேஸ்வரி அவர்கள்.

மருதநிலப் பெண் தெய்வங்கள் எனும் இந்தப் புத்தகத்தில் மிக நுட்பமாக தெய்வங்களையும், வேளாண்மையையும் அதைச் சார்ந்த விழாக்களையும் சமூக வாழ்வினையும் இணைத்து வேறொரு தளத்திற்கு நம்மை நகர்த்திச் செல்கிறார்.

விதை நெல்லின் வீர்யத்தோடு இந்திரனையும், தாய் தெய்வ வழிபாட்டிற்கு அடுத்து தோன்றிய ஆண் முதன்மை சமுதாயத்தின் முக்கியத்துவத்தை இந்திரனைக் கொண்டாடும் இந்திர விழா உணர்த்துகின்றது என்று ஒரு விழாவிற்குப் பின்னுள்ள பெரும் வரலாற்றை விரித்துரைக்கின்றார். அங்கிருந்து தொடங்கி வேளாண் தொழில் சமூகத்தை அலசி ஆராய்ந்தபடியே நகர்ந்து நகர்ந்து கோயில் விழாவில் கொண்டுபோய் முடிக்கின்றார். இப்போது நீங்கள் கோயில் விழாவில் நடக்கும் சடங்குகளை மெல்ல பிரித்தெடுத்தால் இனக்குழுக்களின் தொழில், ஆண்கள் மற்றும் பெண்களின் மேல் கீழ்படி நிலை வாழ்க்கை. அந்த குறிப்பிட்ட இனத்தின் சமூகப் பண்பாடு மற்றும் அவர்களின் சமூகப் பங்களிப்பு போன்றவை அழகாகத் தெரிந்துவிடும். அவர்கள் வணங்கும் தெய்வங்கள் புராணத் தெய்வங்கள் என்று சாதாரணமாக பார்த்துவிட்டு போகமாட்டோம். அவர்களின் உடை, அவர்கள்

கைகளில் ஏந்தியிருக்கும் ஆயுதங்கள் அல்லது உழுபடைக் கருவிகள் போன்றவற்றின் முக்கியத்துவத்தையும் நம்மையுமறியாது ஆராயப் புகுவோம். இப்படி புராணத்திலிருந்து வரலாற்றுப் பார்வையைப் பெற்றுக்கொண்டு ஒரு சமூகத்தையே நம் கண்முன் நிறுத்தும் கூர்மைத் திறனை ராஜேஸ்வரி அம்மா தந்து விடுகிறார் எனில் மிகையில்லை.

ஏன் இந்தப் புராணம் இயற்றப்பட்டது தெரியுமா? இந்தப் புராணம் இயற்றப்பட்டதன் பின்னாலுள்ள சமூக மக்களின் வாழ்வியலை பாருங்கள். ஒரு சமூகம் குழுவாக இயங்கும் போது தங்களின் வாழ்வு மாற்றம் பெறும் தோறும் தெய்வங்களும் மேல்கீழ் என்று தம் நிலையில் மாற்றம் பெறுகின்றன என்கிறார். அதற்கான சான்றுகளை அள்ளி அள்ளி இறைக்கின்றார்.

ஏனெனில், இக்காலத்தில் ஏன் எக்காலத்திலும் தர்க்கம் என்பது மிகவும் முக்கியம். புராணங்கள் வெறும் பொய்யல்ல. அவை இவ்வளவு காலமாக பிழைத்து வந்திருக்கின்றதெனில் ஏதோ ஒரு உண்மைத் தன்மையை தன்னுள் கொண்டிருப்பதே ஆகும். ஆனால், ஆராய்பவர்கள் இல்லாமல் அந்த ரகசியச்சாவி தொலைந்து விட்டதனால் யார் வேண்டுமானாலும் புராணங்களையும்

தெய்வங்களையும் கேலி பேசிச் செல்ல முடியும் என்றாகி விட்டது. இந்தக் காலகட்டத்தில்தான் ராஜேஸ்வரி அம்மா போன்றவர்களின் தர்க்கத்திற்குள் தெய்வங்களின் புராணங்களை நிறுத்தி ஆராயும் வகைமை மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது.

நாத்திகர்கள்கூட இந்த நூலைப் படித்துத் தெளியலாம். அவர்கள் விழுந்து விழுந்து வணங்க வேண்டிய அவசியமில்லை. ஆனால், வியப்புறாமல் இருக்க முடியாது. இழிவோடு பார்ப்பதை நிறுத்தி நிதானத்தோடு தெய்வங்களை எதிர்கொள்வது நிச்சயம். தமிழகத்தின் இன்று தீராதவியாதியாக இருக்கும் ஒரு விஷயம் என்னவெனில், தனக்கு ஒன்றின் மீது நம்பிக்கையில்லையெனில் அதை தரக்குறைவாகவும் இழிவாகவும் பேசும் வழிமுறையைக் கொண்டிருக்கிறார்கள். இதன் மூல ஊற்றுக்கண் எவர் என்பது வெள்ளிடை மலை.

இது போன்ற நூல்களை ஆத்திகர்கள் படிக்கும் போது தாங்கள் வேண்டாது சுமந்து கொண்டிருக்கும் பய மூட நம்பிக்கைகள் போகும். அந்த தெய்வத்தின் மீது இன்றுவரை நாம் கொள்ளும் பயத்திற்கோ, பக்திக்கோ அல்லத மரியாதைக்கோ இதுதான் காரணம் என்று தெளிவு கொள்ளலாம்.

வாராகி வீரத்தின் விளை நிலம் எனும் கட்டுரையை நான் படித்து முடிக்கும்போது இவ்வளவு விஷயங்களா என்று வியந்து போனேன். ஒரு பக்கம் விவசாயக் கடவுள், பெண் சமூகத்தின் ஈடிணையற்ற வீராங்கனை என்று சொல்லிச்சென்று அப்படியே வாராகி எனும் தெய்வத்தன்மையின் நுண்ணிய அம்சமான, எப்படி அந்த தெய்வீகம் வழிபடுவோரின் உட்சென்று அகமாற்றம் ஏற்படுகின்றது என்பதை விளக்குகிறார். பகுத்தறிவின் நுனி வரை சென்று இனி பகுத்தறிவிற்கு வேலை இல்லை என்று தள்ளுவதற்கு உள் முகமான ஒரு தெய்வீக சம்பந்தம் வேண்டும். அவருக்கு இருக்கின்றது என்பதை என்னளவில் நான் நம்புகின்றேன்.

மருத நிலத் தெய்வமான பிடாரியைக் கருவளம் காப்பவளாகத் தொடங்கும் இடத்திலிருந்து நாகர் குலத்தின் மூத்த தெய்வமாகச் சென்று சேர்க்கும் வரை ஏராளமான தகவல்களைத் திரட்டித் தருகின்றார். நாம் செய்ய வேண்டியதெல்லாம் அந்தத் தகவல்களைப் படிக்கும்போதே சீராக நம்முள் அடுக்கி அடுக்கி தொகுத்தபடியே சென்று கொண்டிருக்க வேண்டும். இல்லையெனில் புரியாது போய்விடும். ஒரு தொடர் சமூக வாழ்வினுக்குள் நிகழும் முரண்களை தவறாகப்

புரிந்து கொண்டு விடுவோம். எனவே, நின்று நிதானமாக படிக்க வேண்டியது அவசியம். இதே போன்றே தவ்வை தாய் எனும் குப்பை நாச்சியார் கட்டுரையைப் படித்தவுடன் குப்பைக்குள் மாணிக்கத்தை அல்லவா தேடியிருக்கிறார்கள் என்று தெளிந்தேன். படிப்போருக்கும் வேறு பல ஆச்சரியக் கதவுகள் திறக்கும். இந்நூலின் ஒவ்வொரு பகுதியாக எடுத்து ஆராயப் புகுவது இந்நூலின் பக்கங்களை இரட்டிப்பாக்கும் என்று கருதி என் வியப்பை மட்டுமே இந்த அணிந்துரையில் வெளிப்படுத்துகின்றேன்.

என்னைப் பொறுத்தளவில் இந்நூலிலுள்ள பல தகவல்கள் எனக்குப் புதிதானது. முன்னரே அறிந்தோரும் இருக்கலாம். ஏனெனில், இவரின் மூலமே பல்வேறு விஷயங்களை நான் அறிந்தேன். நான் அறிந்தது மட்டுமல்லாமல் நான் பொறுப்பாசிரியராக இருக்கும் ஆன்மிகம் இதழில் வெளியிட்டேன். நல்ல வரவேற்பு இருந்தது. ஆய்வுக் கட்டுரைகள் எங்கோ பல்கலைக் கழகங்களிலும், பயிலரங்கங்களிலும், கருத்தரங்கங்களிலுமே வாசிக்கப்பட்டும் நூலாக்கப்பட்டும் நூலகத்தின் ஓரத்தில் பொது ஜனங்களின் பார்வைக்கு படாமல் ஒதுங்கி நிற்கும் எனும் விஷயத்தை இவரது கட்டுரைகள்

உடைத்துப் போட்டதை அனுபவப்பூர்வமாக உணர்ந்தேன்.

இது போன்ற நூல்கள் இளைஞர்களின் கரங்களுக்குச் செல்ல வேண்டும். திருமணமோ அல்லது பிறந்தநாள் பரிசு கொடுப்போர்கள் இம்மாதிரி நூல்களைப் பரிசளிக்கலாம். மொய்ப்பணத்தோடு மெய்யான வரலாற்றையும் சேர்த்து அளிக்கலாம். மொய்யின் தொகையைவிட புத்தகத்தின் விலை குறைவுதான். ஆனால், அறிவில் கூர்மை கூடி தெளிவோருக்கு இந்தப் புத்தகத்தின் எடை ஆயிரம் மடங்கு கூடியிருக்கும் என்பதை ஆன்றோர் அறிவார்கள்.

இந்நூலை முடிக்கும்போது மனமெனும் மருத நிலத்தில் தெய்வங்கள் சிம்மாசனமிட்டு அமர்வது நிச்சயம்.

என்றும்அன்புடன்,

**கிருஷ்ணா**

(பொறுப்பாசிரியர் ஆன்மிகம்)

25/8/2020

## நூலாசிரியர் பற்றி



முனைவர் செ. இராஜேஸ்வரி மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். **புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி** போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார். **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைகழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

1988 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். *Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Assisted reproductive technologies and its Impact on Women, Eco Vision and Mission, Bachelor's Study Materials for Social Science [IGNOU], Neuro Ophthalmology Articles* போன்ற பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் *[Associate editor]* பணியாற்றினார். அப்போது ஜப்பானிய

மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.

1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி

பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க *Tamil for Non-Tamils* என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க *Easy English* என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி **“ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100”** என்ற தலைப்பில் விகடன்.காமில் (காம் இணைய தளத்தில்) முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் *www.tamilauthors.com* என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிவருகிறார்.

*எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம். அதில் தற்போது* **வெற்றித் திருமகன்** *என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 18 நூல்கள் வெளிவந்துள்ளன.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள், உன்னொடு உரையாடுதல், காதலின் மொழி மற்றும் திட்டிவாசல் பெண்ணொருத்தி மற்றும் தேனடையும் வரலாறு என்ற கவிதை நூல்களை இவர் முறையே* **"Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You, Language of Love, The Flower Moon (A Lady at the little gate) and Honey Hive",** *என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களை சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல் மற்றும் திட்டி வாசல் பெண்ணொருத்தியின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றைப்* ***பூ மர நிழலில் களமும் காலமும்*** *மற்றும் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பியின்* ***பாடுபொருளும் பாசப்பொருளும் [திட்டிவாசல் பெண்ணொருத்தி மட்டும்], என்ற*** *நூல்களையும்* ***'2020 தை மாதத்தில் இன்று'***

***கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, முத்தமிழ் விரும்பியின் கவிதை காதல்*** *என்ற நூலையும் வெளியிட்டார்.*

*பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில்* ***பண்பாட்டு நகர்வுகள் [தமிழ் நாட்டில் இருந்து ஐப்பானுக்கு], தேவேந்திரன், தமிழகத்தில் பெண் தெய்வ வழிபாடு,*** *ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்*

***சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*** *என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட் டார். இவர் எழுதிய சிறுகதைகள்* ***'அமராவதியின் காதல்'*** *என்ற பெயரில் தொகுக்கப்பட்டு அமேசானில் வெளிவந்தது. நெருஞ்சி இலக்கிய இதழில் இவரது கட்டுரைகள் வருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய* ***"என்னோட ராசி நல்ல ராசி"*** *என்ற தொடர் வந்து கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில் இவரது கட்டுரைகள் தொடர்ந்து வெளிவருகின்றன.*



## உள்ளடக்கம்

# 1. மருதநிலத்து வேளாண்கடவுளர்

*ஆறும் ஆறு சார்ந்த நன்னீர்நிலப்பகுதியும் மருத நிலம் ஆகும். இங்கு வேளாண்மை முக்கியத் தொழில் ஆகும். வேளாண்மைச் சிறப்பு ஒரு நாட்டின் பண்பாட்டின் சிறப்பைக் காட்டுகிறது. வேளாண்மை சிறந்திருக்கும் நாடுகளில் கலை, அறிவியல், பண்பாட்டு ஒழுக்க விதிகள், உணவு, உடை, இருப்பிடம், கைவினைத் தொழில்கள், சமயம், வழிபாடு, கலை இலக்கியம், விழா கொண்டாட்டங்கள் என அனைத்தும் சிறப்பாக இருக்கும். தமிழகத்தில் வேளாண்மை சிறந்திருந்த நிலத்தில் பண்பாடும் கலைகளும் சிறந்து விளங்கின.. தொல்காப்பியர் மருதத்தை 'தீம்புனல் உலகம்' என்றார். இந்நிலத்தின் தெய்வம் வேந்தன் எனப்பட்டான்*

வேளாண்மைக்கு நிலம், நீர், விதை, வேளாண் கருவிகள், உரம் ஆகியன முக்கியமாகும் இவை ஒவ்வொன்றிற்கும் வேளாண் மக்கள் தெய்வத் தகுதி வழங்கி தனித்தனி தெய்வம் வைத்து வழிபட்டனர்.

நன்னிலம் என்பது ஆற்று நீர்ப் பாசனம் உள்ள இடத்தைக் குறிக்கும். இதனை நஞ்சை





பூமி என்பர். புஞ்சை என்பது மழை நீரை எதிர்பார்த்திருக்கும், வானம் பார்த்த பூமி. இங்கு வேளாண்மையுடன் ஆடு மாடு மேய்க்கும் தொழிலும் நடைபெறும். இதனை காடும் காடு சேர்ந்த நிலங்களும் என்றார் தொல்காப்பியர்.

விதை நெல் வீரியம் கொண்டு வளர வேண்டும் என இந்திரனை வணங்கினர். இந்திரன் என்பவன் ஆண் முதன்மை சமுதாயத்தின் முழு முதற் கடவுள் ஆவான். இந்திரனே இந்திரிய தானம் செய்பவன். அதனால் அவனது உலகம் தேவலோகம் என்றும் அங்கு அவனால் இந்திரிய தானம் பெறப்பட்ட அறுபதினாயிரம் பெண்கள் அப்சரஸ்கள் என வாழ்ந்ததாகவும் அவனை உயர்த்திக் கதைகள் புனைந்தனர். வித்து, விந்து இந்திரியம் என்ற சொற்கள் ஆண் முதன்மை சமுதாயத்தின் தாரக

மந்திரங்கள் ஆகும். தாய்த்தெய்வ வழிபாட்டுக்கு அடுத்துத் தோன்றிய இச்சமுதாயம் மனித உற்பத்தியில் ஆணின் பங்கை உணர்ந்து அதனையே முக்கியத்துவப்படுத்தியது.

வேளாண் மக்கள் முதன் முதலில் நிலத்தில் இறங்கி ஏர் உழும் நன்னாளை நாள் ஏர் பூட்டுதல், பொன் ஏர் பூட்டுதல் என்று அழைத்து இந்திரனை வழிபட்டுத் தொடங்குவதுண்டு. நாற்று முடியை ‘இந்திரன் முடி’ என்றனர். நாற்று நடுவதை விழாவாகக் கொண்டாடி இதனை இந்திர விழா என்றனர். புராணிகர்கள் அகலிகை கதை சொல்லி மருதநிலத்தாரின் பொது வழிபாட்டில் இருந்து இந்திரனை விலக்கி வைத்த பிறகும் அவர்கள் இன்று வரை நாற்று முடியை ‘இந்திர முடி’ என்று தான் அழைகின்றனர். வேளாண் குடி மகளிர் நாற்று முடியை வைத்து கும்மி கொட்டி துதிப் பாடல் பாடும்போது

*ஓரானை ஊர்தி மருமகனும்*

*உற்ற துணை நமக்குண்டு பெண்டுகாள்*

*குறிப்புடனே நகரிசரையும்*

*அறம்வளர் தேவியையும்*

*மலரடி சென்னி வைத்து வணங்குவோம்*



என்ற வரிகள் ஓரானை ஊர்ந்து வரும் இந்திரனையும் அறம் போதித்த அன்னையையும் குறிக்கின்றது.

பலருக்கு இந்திரனுக்கும் வேளாண்மைக்கும் என்ன தொடர்பு என்று தெரியாத நிலையிலும் இன்றும் அவன் பெயரால் நடக்கும் சடங்குகளும் வழிபாடுகளும் தொடர்கின்றன.

நாற்று நடுதல் நிகழ்ச்சியை இந்திர விழா என்று வழங்குவர். ராஜபாளையத்தில் வெண் குடை விழா இந்திரன் படம் வரைந்த கொடியை ஏற்றிக் கொண்டாடப்படுகிறது. ஆனால் அங்கு வழிபடு கடவுள் ஐயனார். இந்திரன் வணங்கிய தெய்வமே ஐயனார் என்ற கருத்தும் இங்கு நிலவுகிறது.

கோவை அருகே பேரூர் பட்டிசுவரம் கோயிலில் நடைபெற்ற இந்திர விழா பின்னர் சைவ சமய எழுச்சியின் காரணமாக சிவன் பங்கேற்கும் விழாவாக மாற்றம் பெற்றது. அங்கு ஆனி மாதம் *12* முதல் *23* வரை பத்து நாட்கள் நடைபெறும் இந்திர விழாவில் சிவனும் பார்வதியும் வயலில் இறங்கி மள்ளர் [பள்ளர்] மற்றும் மள்ளத்தியாக உருமாறி வேளாண் பணிகளைச் செய்கின்றனர். இப்பணிகளில் அவர்களுடன் அவர்களின் பிள்ளைகளும் சிவ கணங்களும் சேர்ந்து கழனியில் இறங்கிப் பங்கு பெறுவதாக ஐதிகம். கோயிலுக்கு ஐயனின் அருளைப் பெற வந்த சுந்தரர் அங்கு ஒருவரும் இல்லாததால் வயலுக்கு வந்து அம்மையப்பரிடம் ஆசி பெற்றுச் சென்றதாக தலபுராணம் உரைக்கிறது. தேவேந்திர குல



வேளாளர் மடத்துக்கு ஆண்டுதோறும் சிவனும் பார்வதியும் வந்து நாற்று நட்ட பின்பு கோயிலுக்குத் திரும்புகின்றனர்.

சிவனும் பார்வதியும் காப்புக் கட்டி கோயிலை விட்டுக் கிளம்பும் முன்பு இந்திரனுக்கும் மாலை அணிவித்து பூசைகள் நடைபெறும். பத்தாம் நாள் முழு நிலவன்று ஆனி உத்திரத்தன்று நடராசர் பூசையுடன் விழா நிறைவுறும். பங்குனி சித்திரை முழு நிலவு நாட்களில் இந்திர விழா நடைபெற்றதற்கான சான்றுகள் பழந்தமிழ் இலக்கியத்தில் ஏராளம் உண்டு. இவ்விழாவும் முழு நிலா நாள் அன்றே நிறைவு பெறுகிறது. இதுவே ஆரம்பத்தில் இவ்வழிபாடு இந்திரனுக்கு நடந்ததற்கு நற்சான்றாகும். ஆக விதை இடுதல், நாற்று நடுதல் ஆகிய வேளாண் பணிகளுக்குரிய வழிபடு தெய்வம் இந்திரன் ஆகிறான்.

## உழுபடைக் கருவிகள் –பலராமன், வராகி

மருத நிலத்தில் வேளாண்மை முக்கியத் தொழிலாக இருந்தாலும் அதனை சார்ந்து வேறு பல தொழில்களும் நடந்தன. அவற்றில் சில, தோலால் கமலை செய்தல் [சக்கிலியர்], இரும்பினால் கொழு முனை செய்தல் [கருங்கொல்லர்], மரத்தைக் கொண்டு கலப்பை, நுகத்தடி, வண்டிச் சக்கரம் செய்தல் [தச்சர்],

ஏரியின் கரையைச் செப்பனிட்டு காவல் செய்பவர் [கரையாளர்], கலுங்கு மடையைத் திறப்பவர் [காலாடி] என பல தொழில்கள் வேளாண்மை சார்ந்து விளங்கின.

கலப்பை என்பது முக்கிய உழவுக் கருவியாக உள்ளது இதில் மாட்டும் கொலு பல வகைப்பட்டதாகும். வேளாண் பொறியியல் மற்றும் நீர் மேலாண்மை துறையில் தமிழர்கள் நிகரற்ற ஆற்றல் பெற்று உலகுக்கு முன்னோடியாக இருந்ததற்கு திருச்சி கல்லனை, சென்னை வீராணம் ஏரி, ராமநாதபுரம் கண்மாய் போன்றன தகுந்த எடுத்துக்காட்டுகள் ஆகும். கலப்பையை கையில் வைத்திருக்கும் பலராமன்,

**ஏர் கலப்பையின் பாகங்கள்**



கலப்பை மற்றும் உலக்கையைக் கையில் வைத்திருக்கும் வராகி வேளாண் கடவுளர் ஆவர். பழனி முருகன் மீது பாடப்பட்ட வையாபுரி பள்ளு என்ற நூலில் பலராமன் வந்து தேவேந்திர குலத்தவனிடம் ஆசி பெற்று சென்றார் என்று பாடப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் பலராமன் வழிபாடு இருந்ததற்கு சான்று உள்ளது.

பலராமனும் கண்ணனும் இணைந்த சகோதர வழிபாடு வெள்ளைச்சாமி கருப்புசாமி என்று கிராமங்களில் மாற்றம் பெற்றதாக நாட்டுப்புறவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். கலப்பையைக் கையில் ஏந்தியிருக்கும் பலராமனை அவனது வீரத்துக்கு மதிப்பளித்து பலபத்திரன் என்று வையாபுரி பள்ளு [பாடல் 8] குறிப்பிடுகிறது. இவன் கொப்பத்து யானையைப் போன்ற வலிமை உடையவன்

2000 ஆண்டுகளாக வேளாண் தொழில் செய்யும் மள்ளர் இனத்தவர் மல்லுக்கட்டு, ஜல்லிக்கட்டு, மாட்டு வண்டி பந்தயம், சிலம்பு விளையாட்டு போன்றவற்றில் தேர்ச்சி பெற்றவர்கள். இவர்களின் தெய்வமான பலராமன் மல்லுக்கட்டு [குஸ்தி] செய்வதில் திறமையானவன் என்று கண்ணன் கதைகள் இடம்பெற்ற பாகவதம் கூறுகின்றது. கண்ணனைக் கொல்ல வந்த அசுரர்களை பலராமன் மல்லுக்கட்டி வென்றான்.

அழகர் கோயிலில் பலராமன் வழிபடப்பட்டான். பலராமன் என்ற பெயரில் இப்போது வழிபாடுகள் நடக்காவிட்டாலும் இந்திர வழிபாடு சிவ வழிபாடு ஆனதைப் போல பலராமன் வழிபாடு வெள்ளைச்சாமி என்ற நாட்டுபுற தெய்வ வழிபாடாக புதிய பரிமாணத்துடன் நடந்துகொண்டுதான் இருக்கிறது.



**வராகி**

சப்த கன்னியருள் ஒருத்தியாகப் போற்றப்படும் வராகி தனித்தெய்வம் ஆவாள். இவள் போர்த் தெய்வம் என்று இராஜராஜ சோழனால் தனி சந்நிதி அமைத்து வணங்கப்பட்டாள். மருத நிலத்து ஆண்கள் உழுபடைக்கருவிகள் ஏந்தி வேளாண் பணிகள் செய்யும் வீரமள்ளர்களாகவும் விளங்கியதோடு போர்ப்படைக் கருவிகள் தாங்கி போரிலும் ஈடுபட்டனர். வீர விளையாட்டுக்களால் உடம்புக்கு உரமேற்றினர். எனவே சங்க இலக்கியத்தில் வீரர்களை மள்ளர் என்ற சொல்லால் புலவர்கள் குறிப்பிட்டனர். வீரர் என்ற சொல் சங்க இலக்கியத்தில் எங்கும் காணப்பவில்லை.

வேளாண் மக்களின் பெண் தெய்வமான வராகியும் உழுபடைக் கருவியான கலப்பையும் நெல் விளைந்த பின்னர் அதனை அரிசியாக்க உதவும் உலக்கையும் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளாள். இவள் வெறும் வேளாண் தெய்வம் மட்டும் அல்லள். லலிதா பரமேஸ்வரியின் போர் படைத் தளபதியும் ஆவாள். போர் நடத்தி செல்லும் வீரம் பெற்றவள் என்பதாலும்

இவள் வேளாண் குடிக்குரிய பெண் தெய்வம் ஆகிறாள். பெரும் மருத நிலத்து அதிபதியான ராஜராஜ சோழன் அதனால் தான் அவளுக்கு தனிச் சந்நிதி அமைத்தான். நில உடைமைத்துவம் போருக்கு முதற் காரணி ஆகும்.

## ஐயனார்

ஏரிக்கொரு ஐயனாரும் ஊருக்கொரு பிடாரியும் என்பதைப் போல வேளாண் மக்கள் குடியிருக்கும் ஊர்களில் ஏரி காக்கும் காவல் தெய்வமாக ஐயனார் கோயில் ஒன்று கண்டிப்பாகக் காணப்படும். மழை நீர்த் தேக்கத்துக்கு வழங்கப்படும் பெயர்களான கயம், வாவி, தடாகம், பொய்கை, குளம், குட்டை, ஏரி,



கிடங்கு, மடு, மதகு மடை ஆகியன தமிழ் வேளாண் குடியினரின் மழை நீர் சேகரிப்புக்கான சான்றுகள் ஆகும்.

மருத நிலத்துத் தலைவனான வேந்தன் தனது வேளாண் குடி மக்களுக்கு நீர்த் தேக்கம் அமைத்துத் தருவது அவனது இன்றியமையா கடமையாகக் கருதப்பட்டது. அவ்வாறு செய்யாதவனை மன்னன் என்று மக்கள் கொள்ளார்.

அடுபோர்ச் செழிய, இகழாது வல்லே
நிலன்நெறி மருங்கில் நீர்நிலை பெருகத்]
தட்டோர் அம்மா; இவன் தட்டோரே
தள்ளாதோர் இவன் தள்ளாதோரே

என்று குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பார்த்துப் பாடினர்.

கரிகாலன் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டிய கல்லணை 1800 அடி நீளமும் 40 அடி அகலமும் கொண்டது. பல மன்னர்கள் தமிழகத்தில் வேளாண்மை சிறக்க ஏரிகள் அமைத்தனர். சென்னை அருகில் இருக்கும் பொன்னேரி இராஜகங்கச் சோழன் கட்டியது. வீராணம் ஏரி வீர நாராயணன் என்ற மன்னன் அமைத்தது. வேந்தன் என்போன் வேளாண்மைக்குரிய நீர்நிலைகளை ஏற்படுத்திக் கொடுத்தான்.

*மருத நிலத்து மக்கள் சிறிய கிராமங்களிலும் ஏரிகள் வெட்டியும் குளங்கள் அமைத்தும் மழை நீரைச் சேகரித்தனர். அவற்றுக்கு நல்ல உறுதியான கரைகள் அமைத்தனர். மடைகள் வைத்தனர். கலிங்கு அமைத்தனர். தண்ணீரின் அளவைக் கண்காணிக்க நடு ஏரியில் மனுஷாமிருகம் போன்ற சிலைகள் மற்றும் உயரமான தூண்களை அமைத்தனர். முறைப்படி தண்ணீர் திறந்துவிட ஆட்கள் நியமித்தனர். தண்ணீர் சேகரிப்பு, மேலாண்மை, பகிர்ந்தளித்தல்* [water harvesting, management and distribution] *ஆகியவற்றில் தமிழ் வேளாண் குடியின் அறிவின் முதிர்ச்சியும் முயற்சியும் சிறப்பாக இருந்தது.*



***வீராணம் ஏரி***

காலப்போக்கில் இயற்கையைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றவர்களாக கருதப்பட்ட போதி சத்துவர்களை நீர் நிலைகளுக்குக் காவல் தெய்வமாக்கினர். இப் போதிசத்துவர்களை சாத்தன் [சாஸ்தா], என்றும் அய்யன், ஐயனார் என்றும் மரியாதை பன்மை விகுதியிட்டு அழைத்தனர். ஐயனார் துஷ்ட தெய்வம் அல்ல. உயிர்ப்பலி கேட்காது. மற்ற கடவுளரை கருப்பன், மாடன் சுடலை, என்று அவன் இவன் என வழங்கினாலும் அய்யனாரை 'அர்' விகுதியிட்டு மரியாதையுடன் அழைத்தனர். இவரும் தேவேந்திரனைப் போல யானையின் மீது அமர்ந்து இருப்பார். சில அறிஞர் பெருமக்கள் தேவேந்திரனே ஐயனார் என்ற பெயரில் வழிபடு தெய்வமாகப் போற்றப்பட்டான் என்றும் கருதுகின்றனர்.

தமிழகத்தின் தென் பகுதிகளில் சாஸ்தா குளம் ஏரி ஆகியவற்றுக்கு காவல் தெய்வம் ஆனார். மதுரை மற்றும் அதன் அருகில் உள்ள ஊர்களில் ஏரி காத்த ஐயனார், மடை காத்த ஐயனார், அருஞ்சுனை காத்த ஐயனார் என்று மக்கள் இவரை அவர் காவல் செய்யும் நீர்நிலையின் பெயரால் அழைத்தனர். ஐயனார் என்ற தெய்வம் சேகரிக்கப்பட்ட நீருக்குரிய காவல் தெய்வம் ஆகும். இவருக்கு உயிர்ப்பலி கொடுப்பதில்லை. யானை அல்லது குதிரையின்



மீது இவர் வீற்றிருப்பார். கருப்பசாமிக்கு கருப்பு நிறம் தீட்டி கிடா மீசையுடன் உருவகிக்கும் கிராமத்தினர் ஐயனாரை வடநாட்டுக்காரர் போல தோல் வெளுப்பாகவும் மீசை இல்லாமலும் சிலை வடிப்பதுண்டு. இவருக்கு கிராமம்தோறும் கோயில்கள் உள்ளன. அவை பெரும்பாலும் கண்மாய், குளம் மற்றும் ஏரிக் கரைகளில் எழுப்பப்பட்டுள்ளன.

## பிடாரி

பிடாரி கோயில் முன்பு ஊருக்கு ஒன்று என்று இருந்தது. அவள் யாருக்கும் அடங்காத துணிவும் உரமும் கொண்டவள். அவளை மக்கள் பிறந்த குழந்தை நோய்வாய்ப்பட்டு இறக்காமல்

நீடுழி வாழ வழிபட்டனர். மருத நிலத்தில் வேளாண் பணிகளுக்கென ஆட்கள் அதிக எண்ணிக்கையில் தேவைப்பட்டனர். அதனால் ஆண்கள் இரண்டு மூன்று திருமணங்கள் செய்து அதிகளவில் குழந்தைகள் பெற்றுத் தமது குடும்பத்து எண்ணிக்கையை அதிகமாக்கினர். குழந்தை பெறும் பெண்ணே சமுதாயத்தில் மதிக்கப்பெற்றறாள். எனவே ஆற்று நீர்ப் பாசனம் உள்ள இடங்களில் ஊருக்கொரு பிடாரி அம்மன் கோயில் எழுப்பபப்பட்டு அவளிடம் குழந்தையைக் காக்க வேண்டி உயிர்ப்பலி கொடுக்கப்பட்டது.

**மாரியம்மன்**

இந்திரன் இடி மற்றும் மழைக்குரிய கடவுள் எனக் கருதப்பாடாலும் அக்கருத்து வட நாட்டில் தான் பிரபலமாகியுள்ளது. தமிழகத்தில் மழைக்குரிய கடவுள் மாரியம்மன். மாரி என்றால் மழை. அவள் வழமை கோட்பாடு சார்ந்த தெய்வம் ஆவாள். அவளுக்கு ஆடி, பங்குனி மாதத்தில் விழா எடுக்கப்படும். வேளாண் பணிகள் முடிந்த நிலையிலும் [பங்குனி] தொடங்கும் நிலையிலும் [ஆடி] வணங்கப்படுவாள். வளமைச் சடங்கான [FERTILITY ritual] முளைப்பாரி எடுத்தல் மாரியம்மனுக்குரிய முக்கிய வழிபாட்டுச் சடங்காகும். பயறு விதைகளை மண்ணில் பூசி



அதன் மீது தண்ணீர் தெளித்து ஒரு வாரம் இருட்டறையில் வைத்து வளர விடுவர். அந்த விதைகள் பொன்னிறமாக வளர்ந்திருந்தால் அந்த ஆண்டு நல்ல மழை பொழியும் என்று ஊகிக்கலாம். வெளிர் பச்சையாக இருந்தால் மழை குறைவு என அறியலாம். மாரியம்மனுக்கு சிறப்புப் பூசைகள் செய்தால் அவள் மனம் குளிர்ந்து மழை பெய்விப்பாள் என்பது சமய நம்பிக்கை.

ஜேம்ஸ் ஃபிரேசர் என்பவர் மக்களின் ஆதி சமய நம்பிக்கையை போலச் செய்தல் சடங்கு *[IMITATIVE RITUAL]* என்றார். முளைப்பாலிகை எடுப்பதும் ஒரு போலச் செய்தல் சடங்கே ஆகும். பயறு பச்சை நன்றாக விளைய வேண்டும் என்று ஆசைப்படுவோர் ஒரு முன்னோடி ஆய்வாக *[AS A PILOT STUDY]* இச்சடங்கைச் செய்கின்றனர். இதன் விளைச்சலைக் கண்டு மழையின்

அளவைக் கண்டுகொள்கின்றனர். மழை பெய்யவில்லை என்றால் வெப்பம் அதிகரித்து மக்களுக்கு புட்டம்மை, பாலம்மை, பொன்னுக்கு வீங்கி, கண் வலி, அக்கி, மணல் வாரி போன்ற வெப்ப நோய்களின் தாக்குதல் ஏற்படும். இதனால் மாரியம்மனுக்கு பொங்கல் வைத்தும் மாவிளக்கு எடுத்தும் கூழ்காய்ச்சி ஊற்றியும் தீச்சட்டி எடுத்தும் வணங்குகின்றனர்.

**உரத்துக்குத் தவ்வை என்ற குப்பை நாச்சியார்**

வேளாண்மை பணியில் முக்கியமான ஒரு பணி பயிர்களுக்கு உரமிடுவதாகும். பசுமைப் புரட்சி என்ற பெயரில் மண்ணுக்கு உப்பிடும் செயற்கையான வேதி உரங்கள் அறிமுகமானதால் விளைச்சல் பெருகினாலும் மண் வளம் அழிந்துபோனதைக் கண்கூடாகக் காண்கிறோம். இதனால் இப்போது மக்கள் இயற்கை வேளாண்மை என்ற துறையில் நாட்டம் செலுத்தி வருகின்றனர். அக்காலத்தில் இயற்கை உரத்துக்கு என்று ஒரு தெய்வத்தை வைத்து வணங்கினர். அவளுக்குப் பெயர் குப்பை நாச்சியார்.

தவ்வை எனப்பட்ட மூத்தவள் என்ற பொருள்படும் பெண்தெய்வம் காலப்போக்கில் மூதேவி என்று இகழப்பட்டு கோயிலில் இருந்து அகற்றப்பட்டது. சங்க இலக்கியத்தில் தவ்வை என்று அழைக்கப்பட்டவள்

இடைக்காலத்தில் வடமொழியில் ஜேஷ்டா தேவி என்ற பெயருடன் கோயிலில் வைத்து வணங்கப்பட்டாள். பக்தி இயக்கத்தில் அவள் காணாமல் போன கடவுளர் பட்டியலில் சேர்ந்துவிட்டாள். அவள் இருந்த தென் மேற்கு மூலையில் கஜலட்சுமி இடம் பெற்றாள்

குப்பை நாச்சியார் என்று தெய்வாம்சம் அளிக்கும் படி குப்பையில் என்ன இருக்கிறது எனக் கேட்டால் மட்கும் குப்பை மண்ணுக்கு உரமாகும். முன்னர் வீட்டில் மாட்டு சாணம், காய் கறி கழிவுகள் போன்றவற்றை வீட்டின் ஒரு மூலையில் குப்பைக்கேன்று குழி வெட்டி அங்கு கொட்டி வைப்பதுண்டு. திருக்கார்த்திகை தினத்தன்று அங்கு குட்டி மெழுகி விளக்கேற்றி வைத்து வணங்கியபின்பு மக்கிய குப்பையை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு போய் நிலத்தில் உரமாகப் போடுவர். சிலர் குப்பைகளைக் கொளுத்தி சாம்பலாக்கி அதனை வயலில் தூவுவதுண்டு. இந்தக் குப்பை கொட்டும் இடத்தில் தெய்வமாக இருப்பவள் அந்தக் குடும்பத்துக்கு நல்ல விளைச்சலைக் கொடுத்து காப்பவள் குப்பை நாச்சியார்.

## நிறைவு

ஆக வேளாண்மை தொழில் தொடர்பாக விதைநெல் [இந்திரன்], மழை [மாரியம்மன்] ],

*ஏரி காத்தல் [ஐயனார்], உழவு கருவி [பலராமன், வராகி], மக்கள் நலம் [பிடாரி], உரம் [குப்பை நாச்சியார்] என ஒவ்வொன்றுக்கும் தனித்தனி கடவுள் வழிபாடுகள் தொடர்ந்து நடந்து வருகின்றன. மக்கள் தாம் ஆசைப்படுவது நடக்க வேண்டும் என்பதற்காக அதையே கடவுளிடம் செய்து காட்டி 'இது எங்களுக்கு வேண்டும்' என்று கேட்கின்றனர். இந்திர வழிபாட்டில் கடவுளரே வந்து நாற்று நடுவதாக செய்து காட்டுதலும் மாரியம்மன் வழிபாட்டில் முளைப்பாரி எடுத்தலும் தொல்சமய முறைகளில் [PRIMITIVE RELIGIOUS PRACTICES] பின்பற்றப்பட்ட போலச் செய்தல் சடங்கேயாகும்.*




பத்மாவதி அம்மன்


சக்ரேஸ்வரி


சுவாலாமாலினி


கூஷ்மாண்டி


வராகி


ஜினவாணி

சமணப் பெண் தெய்வங்களில் வராகி

# 2. வராகி - வீரத்தின் விளைநிலம்; வேளாண்மையின் அடையாளம்

வராகிக்கு அளிக்கப்பட்ட உருவத்தைக் கொண்டும் கற்பிக்கப்பட்ட செயல்பாடுகளைக் கொண்டும் முழுமையாக ஆராய்ந்து அத் தெய்வத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். புராணக் கதைகளின் ஆன்மாவைப் புரிந்து கொண்டால் அவளைப் பற்றிய முழு புரிதல் நமக்கு கிடைக்கும். ஒவ்வொரு கடவுளின் உருவாக்கத்துக்கும் ஒரு முக்கியத் தேவை இருக்கும். ஒரு வரலாற்று நிகழ்வைப் பதிவு செய்வதற்காக மக்கள் தெய்வங்களை உருவாக்கி வழிபாடுகளை மேற்கொள்வர்.

## வேட்டைச் சமூகத்தை தொடர்ந்து தோன்றிய வேளாண் சமுகம்

சப்த கன்னியருள் ஒருத்தியான வராகி பன்றி முகம் கொண்ட துடியான கடவுள். இவளைப் போர்த் தெய்வம் என்றும் வெற்றித் தேவதை

என்றும் பகையை அழிக்க உதவுவாள் என்றும் இது வரை நம்பப்பட்டு வருகிறது ஆனால் வராகி வீரத்தின் விளைநிலம். வேளாண் தெய்வம். அவள் வேட்டைச் சமுதாயத்தின் எச்சம்; ஆணாதிக்கத்தின் தொடக்கம்; இரு வகை பண்பாடும் இணைந்த உருவம். பெண் முதன்மைச் சமுதயத்தில் மூத்த தாய் சண்டைக்கு முதன்மை வகிப்பாள்; அந்த வீரத்தின் எச்சமாக போர்க்கருவிகளை ஏந்தியவளாக வராகி உருவகிக்கப்படுகிறாள்.

வராகியைப் பற்றிய இது வரை நிலவி வரும் கருத்துக்களை முதலில் தெரிந்து கொண்ட பின்பு வராகி வீரத்தின் விளை நிலமாகவும் வேளாண்மையின் அம்சமாகவும் விளங்குவது குறித்து விரிவாகக் காணலாம்

## இந்து சமயத்தில் வராகி

தேவி மகாத்மியம் வராகி சும்ப விசும்பர்களையும் ரத்த பீஜனையும் காளி கொல்ல முனைந்த போது அவளுக்குத் துனையாக நின்றவள் என்கிறது. இவளைத் தேவியின் படைத் தளபதியாக லலிதோபாக்யானம் எடுத்துரைக்கிறது. விஷுக்ரன் என்ற அசுரனை வராகி தனித்து நின்று வதம் செய்தாள். வராகி எதிரிகளின் கொழுப்பை அடக்கி அவர்களின் அறிவைக் குலைத்து



*இராஜகம்பீரம் ஸ்ரீ ஆனந்த வராகி (ஆஷாத நவராத்திரி நிறைவு நாவல் (30-6-2020))*

பைத்தியமாக அலைய விடுவாள் என்பதால் மன்னர்களும் மற்றவர்களும் தமது பகையை ஒழிக்க இவளுக்குச் சிறப்பு பூசைகள் நடத்தி வழிபட்டனர். உன்மத்த பைரவரை இவளுக்கு இணையாகச் சேர்த்தும் இடைக்காலத்தில் வடநாட்டில் நூல்கள் எழுதியும் பேசியும் வந்தனர்.

## ஐந்து எட்டு என வராகியும் வளர்ந்தாள்

சமுகத்தின் மதிப்பு பெற்ற கடவுள் எதுவாக இருந்தாலும் அதனைச் சமயங்கள் தன்னுடையவையாக ஏற்றுக்கொண்டு தமக்கேற்ப மாற்றிக்கொள்ளும். அவ்வாறு பௌத்த சமயம் ஐந்து வகையாக வராகியை வளர்த்தது. பௌத்தத்தில் வஜ்ராயனப் பிரிவு வராகியை வழிபடு தெய்வமாகக் கொள்வதால் அங்கு அவள் வஜ்ர வராகி என்றும் மரிச்சி என்றும் வழங்கப்படுகிறாள். இந்து சமயமோ ஆதிவராஹி, பிருஹத் வராஹி, லகு வராஹி, பஞ்சமி வராஹி, அஷ்வாரூடா வராஹி, சுத்த வராஹி, தண்டநாதா வராஹி, தும்ர வராஹி, ஸ்வப்ன வராஹி, வார்த்தாளி என்று பத்தாக வளர்த்துள்ளது. இதில் எட்டை மட்டும் எடுத்து அஷ்ட வராகி என்று அழைப்பதும் உண்டு. தாந்திரிகம் இவளை சோபன வராகி, கண்ட வராகி, மகி வராகி, கிருசா வராகி மச்ச வராகி என்று ஐந்தாக வளர்த்துவிட்டது.

வராகியை இந்து சமயத்தில் ஆணாகக் கருதுவதும் உண்டு. அவளே லலிதையின் தகப்பனார். லலிதையின் தாய் குருகுல்லா. இவர்கள் இருவருக்கும் ஒரிசாவின் தலைநகருக்கு அருகே கொரகொரோ என்ற ஊரில் தனிக் கோயில் உள்ளது.

## வராகிக்கு உரியவை

வராகி மனித உடம்பில் எலும்புக்கு உரியவள். மருந்துகளில் இனிப்பையும் ஈரத்தையும் குறைக்கும் சிறு குறிஞ்சான் மற்றும் சிற்றரத்தைக்கு உரியவள். உன்மத்த பைரவி, ஸ்வப்னேசி, திரச்கரணி, கிரிபதா ஆகியோர் இவளது பரிவார தேவதைகள் ஆவர். இவளுடைய சிம்மத்துக்கு வஜ்ர கோஷம் என்றும் வாகனமான ரதத்துக்கு கிரி சக்ர ரதம் என்றும் பெயர் சூட்டப்பட்டுள்ளது. கிரி என்றால் பன்றி. இவளுடைய ரதம் பன்றிகளால் இழுத்துவரப்படும். வராகியின் யந்திரத்துக்குப் பெயரும் கிரி சக்ரமே ஆகும். வீரை கவிராச பண்டிதரால் 16ஆம் நுற்றாண்டில் எழுதப்பட்ட வராகி மாலை இவளது யந்திரத்தை அதன் அமைப்பை அதன் செயல்பாட்டை ஒரு பாடலில் விளக்குகிறது

தேராத வட்டம் முக்கோணம் சட்கோணம் துலங்கு வட்டத்து

ஈராறு இதழிட்டு ரீங்காரம் உள்ளிட்டு அதனடுவே

ஆராதனை செய்தது அருச்சித்துப் பூசித்தடி பணிந்தால்

வாராதிராள் அல்ல; ஞான வாலை வராகியுமே

It consists in the worship of a picture of the female organ drawn in the centre of another consisting of a representation of nine such organs, the whole of which forms the *Sri Cakra*.



Fig. 7
*Yantra*



Fig. 8
*Yantra*



Fig. 9
*Yantra*



Fig 10
*Sri-yantra*

## தமிழகத்தில் வராகி கோயில்கள்

பக்தி இயக்கம் தோன்றி சிவன் கோயிலில் சாமி சன்னதியின் உள் பிரகாரத்தில் வராகிக்கு இடமளித்ததற்கு முன்பு தமிழகத்தில் அவள் பௌத்த தெய்வமாகப் போற்றப்பட்டாள். அதனால் பௌத்தம் செழித்திருந்த தமிழகத்தின் தென் பகுதியிலும் பௌத்தர்களின் தலைமைப் பீடமாக விளங்கிய காஞ்சிபுரத்திலும் வேளாண்மை சிறந்து விளங்கிய பௌத்தர்கள் அதிகளவில் கோயில்கள் கட்டியிருந்த காவிரிக் கரையின் திருச்சி தஞ்சை நாகப்பட்டினம் பகுதியிலும் வராகிக்குத் தனிக் கோயில்கள் இருந்தன. இவற்றில் பலவற்றை பின்னர் வந்த மன்னர்கள் இடித்துவிட்ட போதும் ஒரு சில தப்பிவிட்டன. அவ்வாறு தப்பிய கோயில்கள் வருமாறு;

இராமநாதபுரம் அருகே உத்தரகோச மங்கையில் வராகிக்கு பழைய கோயில் ஒன்று உள்ளது. இதனைச் சிலர் 3500 ஆண்டுகள் பழையது என்று சற்று மிகைப்படுத்தி கூறினாலும் இக்கோயில் பழமையானது எனபதில் ஐயமில்லை. ஏனெனில் இங்கு சிவன் விஷ்ணு சிலைகள் எதுவும் கிடையாது. பக்தி இயக்கத்துக்கு முந்திய காளி, பைரவர், மற்றும் நாட்டுப்புறத் தெய்வங்களான கருப்பசாமி, ராக்காச்சி ஆகியவையே பரிவாரத் தெய்வங்களாக உள்ளன. வராகி அம்மனுக்குரிய

பூஜை காலம் உச்சிப்பொழுது மற்றும் நள்ளிரவு *12* மணி என்பதால் இக்கோயில் மதியம் *12* மணிக்கு திறக்கப்படும்.

விழுப்புரம் அருகே சாலாமேடு என்ற ஊரில் அஷ்ட வராகிக்கு கோயில் உள்ளது. இதுவே தமிழகத்தின் பழைய கோயில் என்று அங்கு வசிப்போர் கூறுகின்றனர்.



காஞ்சிபுரம் அருகே பள்ளூர் என்ற கிராமத்தில் அரசாலையம்மன் கோயில் என்ற பெயரில் வராகியம்மனுக்கு ஓர் ஆலயம் உள்ளது. வராகி சகஸ்ரநாமத்தில் அரசாலை என்றும் வராகி அழைக்கப்படுகிறாள். இங்கு தெற்கு நோக்கிய சொர்ண வராகியாகக் காட்சி அளிக்கிறாள். இக்கோயில் 1500 ஆண்டுகள் பழமையானது என்று அங்கு வாழும் மக்கள் தெரிவிக்கின்றனர்.

திருச்சிக்கு அருகில் உள்ள திருவானைக்காவில் அகிலாண்டேஸ்வரி வராகி அம்சமாக எழுந்தருளி இருப்பதால் இங்குத் திருக்கல்யாணம், பள்ளியறை பூஜை ஆகியன கிடையாது. இக்கோயில் வராகி பீடமாகப் போற்றப்படுகிறது. இரவில் வராகிக்குரிய பூஜைகள் இங்கு நடத்தப்படுகின்றன.

நாகப்பட்டினம் பௌத்தர்களுக்கான தங்குமிடங்களையும் பலவேறு தீவுகளில் இருந்து இங்கு வந்திறங்கும் பௌத்தர்களுக்கான வழிபாட்டு ஸ்தலங்களையும் கொண்டிருந்த நகரம் ஆகும். இங்குள்ள வழுவூர் வீரட்டேசுவரர் கோயில் முன்பு வராகியம்மனுக்கான தனிக் கோயிலாக இருந்துள்ளது. சைவ எழுச்சிக்கு பிறகு இக்கோயில் சிவன் கோயிலாக மாற்றப்பட்டுள்ளது.

தூத்துக்குடி மாவட்டத்தில் எட்டையபுரத்துக்கு அருகே நரிப்பட்டி என்ற ஊரில் வராகிக்கு தனிக் கோயில் ஒன்று உள்ளது. நரி பவுத்த தெய்வமான இடாகினியுடன் தொடர்புடையது.

**வராக முகமும் கலப்பையும்**

வேட்டைச் சமுகத்துக்கு அடுத்துத் தோன்றிய வேளாண் சமுதாயம் பெண்ணை அடிமைப்படுத்தி குழந்தை பெறும் இயந்திரமாக்கி வீட்டுவேலைகளில் முடக்கிப்போட்ட போது பெண் வேளாண்மைப் பணிகளுக்கும் முக்கியமானவள் என்பதை உறுதிப்படுத்தும் வகையில் வராகி உழவுக் கலப்பையுடன் உருவகிக்கப்பட்டாள். உழவுக் கருவி ஏந்தி இருக்கும் ஒரே பெண் தெய்வம் வராகி மட்டுமே.

அடுத்ததாக வராகியின் கையில் இருக்கும் ஆயுதம் நெல் குத்தும் உலக்கை ஆகும். உழுது பயிரிடுதலுக்குரிய கலப்பையும் விளைந்த நெல்லைக் குத்தி அரிசியாக்கும் உலக்கையும் அவள் கைகளில் இருப்பது அவள் வேளாண் தெய்வம் என்பதை உறுதி செய்கிறது.

வராகியின் பன்றி முகத்தை வைத்துப் பலரும் அவளை வராக அவதாரத்துக்கு இணை சேர்க்கின்றனர். காளிக்கும் சப்தகன்னியருக்கும்

ஆண் தெய்வங்களை ஜோடி சேர்ப்பது தான் தர்மம் என்று வைதிகர்கள் கருதினர். ஆனால் வராகிக்கு அவ்வாறு செய்வது கடினமாக இருந்ததால் அரி, அரன், நாரதர் உன்மத்த பைரவர் எனப்பல பெயர்களைக் கூறினர். ஆனால் வராகி எந்த ஆணுக்கும் ஜோடி தெய்வம் கிடையாது. அவள் தனித் தெய்வம். திருவானைக் காவலில் அம்மன் வராகியாக [இரவில் மட்டும்] இருப்பதனால் அங்குப் பள்ளியறை பூஜை இல்லை. அவள் ஆணுக்கு ஜோடி அல்ல அவள் தனியாக நின்று அருள் பாலிப்பவள்.

## வேளாண் தெய்வமான வராகி

வராக முகம் என்பது அவளை வேளாண்மையுடன் இணைத்து காட்டும் முக்கியக் குறியீடு ஆகும். வராகத்தின் ஒற்றைக்



கொம்பு கலப்பையின் கொழு போன்றது. அது தான் நிலத்தைக் கீறி அடிமண்ணை மேலே கொண்டு வரும். அதுவே உழுதலின் நோக்கம். வராகம் என்பது உழவின் ஒற்றை அடையாளமாக இப் பெண் தெய்வத்துக்கு அமைந்துள்ளது. ராஜராஜ சோழன் கட்டிய பெரிய கோயிலில் இவள் கையிலும் உழவு கலப்பை ஏந்திக் காட்சியளிக்கிறாள்.

வராகப் பெருமாளின் அவதார நோக்கத்தை அறிந்து கொண்டால் வராகம் என்பதன் அடையாளம் அல்லது அர்த்தம் என்ன என்பதை புரிந்துகொள்ளலாம். வராக அவதாரமே தனது ஒற்றைக் கொம்பைக் கொண்டு பூமியை அகழ்ந்தெடுக்க தோன்றியது தான். எனவே வராகம் என்பது பூமியைக் குத்திக் கிளறி மேலே கொண்டு வருவது. அதனை புராணக் கதைகள் பூமிப்பந்தை எடுத்து விட்டதாகக் கதை சொன்னாலும் அதன் உள்ளர்த்தம் வராகம் என்பது உழவுக் கலப்பையின் குறியீடு என்பதாகும், பூமியைக் கிளறி அடியில் இருக்கும் மண்ணை மேலே கொண்டு வர வல்லது என்பதை வராகம் என்ற வடிவம் உணர்த்துகிறது.

வராகியின் கையில் இருக்கும் நெல் குத்தும் உலக்கையும் அவள் வேளாண்மைக்குரிய, வேளாளர்களுக்குரிய தெய்வம் என்பதை நிறுவ உதவுகிறது.

சப்த கன்னியருள் வராகி மற்றும் சாமுண்டிக்கு மட்டும் ஜோடி தெய்வங்கள் கண்டுபிடிப்பதில் சிரமம் ஏற்பட்டது. இவர்கள் இருவரும் மற்ற கன்னிகளைப் போல மென்மையான கொடி போன்ற தோற்றம் உடையவர் அல்லர். தாய்த் தெய்வம் போன்ற பருத்த வயிறும் கனத்த மார்புகளும் கொண்டவர்கள். வராகி மூதாயின் உருவகமாக விளங்குவதாலும் அவள் சண்டைக்காரியாக இருப்பதாலும் கரிய நிறத்துடன் திராவிட உருவ அமைப்புடன் தடித்த பெண்ணாக சிலை வடிக்கப்படுகிறாள்.

## சிவன் கோயிலில் வராகி

சைவ சமயத்தில் சாமி சன்னதியின் உட்பிரகாரத்தில் எழு சப்த மாதர்களுள் ஒருத்தியாக இருக்கும் வராகிக்குச் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. பத்தாம் நூற்றாண்டில் தனது பெரிய கோயிலில் இவளுக்குத் தனி சன்னதி அமைத்த இராஜ ராஜ சோழன் காலத்தில் தான் வராகி சைவக் கோயிலுக்குள் இடம் பெற்றாள்.

## ஆயுதங்கள்

வராகி நான்கு ஆறு எட்டு கைகளுடன் வடிவமைக்கப்பட்டு ஆயுதங்களையும் மண்டை



தஞ்சை பிரகதீஸ்வரர் கோபுர வராகி
அம்மன் சிலை

ஒட்டையும் ஏந்தியவளாக இருந்தாலும் அவள் எருமைமாட்டின் வால், காண்டா மணி, உழவுக் கலப்பை, உலக்கை போன்ற விநோதமான ஆயுதங்களுடன் இருப்பது குறிப்பிடத்தக்கது.

இந்த ஆயுதங்களை இவள் தாங்கியிருப்பதன் காரணம் யாதெனில் இவள் இன்று சாட்டையால் அடிப்பதைப் போல இவள் மாட்டு வாலால் அடித்துத் தண்டிப்பாள். இவளைத் தண்ட நாயகி என்று குறிப்பிடும் தேவி மகாத்மியம் படைத் தளபதியாகக் கொள்கின்றது. இவள் பகைவர்களைத் தண்டிப்பவள். மாட்டு வால் என்பது அந்தக் காலத்தில் மனிதர்களை தண்டிக்கப் பயன்பட்ட ஒரு கருவியாகும்..

வராகி கையில் இருக்கும் காண்டா மணி மற்றும் சக்கரம் ஆகியன காலத்தைக் குறிக்கும் குறியீடுகள் ஆகும். அவளைக் காலதேவனின் மனைவி என்று காலனோடு தொடர்பு படுத்துவதன் காரணம், அவள் இறப்புக்குரிய கொலைத் தெய்வமும் ஆவாள் என்பதே. இதனால் இவளை யமனின் மனைவியாக்கி யமி என்றும் குறிப்பிடுவர். பாவனோபநிஷதம் ‘வராகி பித்ரு ரூபா’ என்று இவளை இறந்தவர்களின் உருவமாகக் கொள்கிறது.

ஒரு கையில் உலக்கையும் மறு கையில் உழவுக் கலப்பையும் கொண்டிருக்கும் வராகி தன்னிரு கரங்களையும் அபய வரத ஹஸ்தமாகவும் வைத்திருப்பாள். இவ் உருவத்தில் இருக்கும் வராகி உழவுக் கலப்பையால் ஆக்குதல் [பயிர் வளம்] உலக்கையால் நெல் குத்துதல் (உணவு வளம்)

மற்றும் அபய கரத்தால் காத்தல் மற்றும் வரத கரத்தால் அருளல் ஆகிய செயல்பாடுகளின் வடிவமாக விளங்குகிறாள். அபய வரத ஹஸ்தம் அளித்து அவளை மேன்மைப்படுத்தி மென்மைப்படுத்திப் பிற்காலத்தில் உருவாக்கினாலும் அவள் வீரத்துக்கும் வேளாண்மைக்கும் உரியவள் என்பதைக் குறிக்கும் கலப்பையும் உலக்கையும்



மாட்டுவாலும் அவள் கையில் நீங்காமல் இடம் பெற்றிருப்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

புராணங்களும் தேவி மகாத்மியமும் அவளைப் போர்த் தெய்வமாக மட்டுமே கொள்ள வேண்டும் என்று கருதியதாலும் ஆண் முதன்மைச் சமுதாயத்தில் தோற்றுவிக்கப்பட்ட சமய மரபுகள் பெண்ணுக்கு உழவு போன்ற கடினமான வேளாண் பணிகளில் இடமளிக்க முன் வராததாலும் பிற்காலத்தில் அவளிடம் இருந்து கலப்பையையம் உலக்கையையும் எடுத்துவிட்டனர். பழைய காலச் சிற்பங்களில் இவள் கலப்பை, உலக்கை, மாட்டு வால், மணி போன்ற ஆயுதங்களுடன் தோற்றமளிக்கிறாள். யானையை அடக்கும் அங்குசமும் அவள் கையில் உண்டு.

**வைணவமும் வராகியும்**

வைணவம் வராகியைத் தன்னுடையவளாக சொந்தம் கொண்டாடிய போது, வராகப் பெருமாளிடம் உள்ள சங்கு சக்கரம் தண்டாயுதம் தாமரை போன்றவற்றை இவள் கைகளில் கொடுத்திருப்பதைச் சில சிலைகளில் காணலாம். காளியைப் போல இவள் கையில் ரத்தத்தை ஏந்திக் குடிக்கும் மண்டை ஓட்டையும் காணலாம் அதற்கு அந்தகாசுரனை வதைத்த கதையும் ரத்த பீஜனைக் கொன்ற போது

அவனது ரத்தத்தைக் குடித்த கதையும் பல புராண நூல்களில் சொல்லப்படுகிறது.

## சமயங்கள் கொடுத்த வாகனங்கள்

சைவம் தழுவிய வராகியின் வாகனமாக மகிஷம் [எருமை], புலி, போன்ற விலங்குகள் காணப்படும். வைஷ்ணவ வராகிக்கு சேஷ வாகனம் உண்டு. துணையாளாக கருடன் உண்டு. பௌத்தத்தில் அவள் பதுமம் [தாமரை] அல்லது பீடத்தில் அமர்ந்து இருப்பாள். சாக்தத்தில் இவளை இருட்டின் அம்சமாக [தூமாவதி, துரும வராகி] இரவுத் தேவதையாகக் கொள்வர். இவள் பிரேதம் அல்லது பெண் எருமையின் மீது தோன்றுவாள். வராகி தனது ஜம்பினி குதிரை மீது அமர்ந்து உருவமைப்பும் உண்டு. சாவின் மூலமாக இவள் முக்தி அருள்பவள் என்பதால் கைவல்ய ரூபினி என்று அழைப்பதும் உண்டு.

## நடு ராத்திரி & உச்சிப் பொழுதின் வழிபாடு

வராகி வழிபாடு பஞ்ச மகரங்களுடன் கூடியது. அவளை வணங்கியவர்களின் எதிரிகள் நாசமடைவது உறுதி. மது, மச்சம் [மீன்], தானியம், மாமிசம், மைதுனம் எனப்படும் சடங்கியல் கலவி ஆகியன உண்டு. கங்கைக் கரையில் இருக்கும் காலராத்ரி கோயிலில் வராகி சன்னதியில் இரவில் இப்போதும் இவ்வழிபாடுகள் நடக்கின்றன. இக்கோயிலை

பகலில் பூட்டி வைத்திருப்பர். மார்க்கண்டேய புராணம், வராக புராணம், மச்ச புராணம், தேவி புராணம் வராகி பற்றிய கதைகளை உருவாக்கி சேர்த்துள்ளன. இவள் சப்த மாதரில் ஐந்தாமவளாக இருப்பதால் இவளைப் பஞ்சமி என்பர். உடலில் இவள் மணிபூரகத்துக்கு [தொப்புள் பகுதிக்கு) உடையவள்

## கோயில் வரலாறு

இடைக்காலத்தில் [9, 10ஆம் நூற்றாண்டில்] வராகிக்குத் தனி கோயில்கள் எழுப்பப்பட்டன. அக்காலத்தில் இந்தியா முழுக்க பக்தி இயக்கம் பரவியிருந்தது. இவ்வியக்கம் தமிழகத்தில் தோன்றி வடக்கே பயணித்தது. அப்போது அதுவரை வழிபாட்டில் இருந்த பூர்வீகத் தெய்வங்கள் அனைத்தும் வைதிகச் சமயங்களுக்குள் இழுக்கப்பட்டன. வைதீகச் சமயங்கள் அவைகட்குப் புதிய புராணக் கதைகளை உருவாக்கி சைவ வைணவக் கோயில்களில் பரிவாரத் தெய்வங்களாக அமர்த்தப்பட்டன.

பௌத்தம் செழித்திருந்த இடங்களில் மட்டும் வராகிக்கு தனிக் கோயில்கள் இருந்தன. ஒரிசாவில் சவுராசி என்ற ஊரில் மச்ச வராகிக்கு தனிக் கோயில் உருவானது. நேபாளத்தில் பேயா ஏரியின் நடுவில் வராகிக்கு கோயில் உள்ளது.

பக்த பூரில் ஜெய பராகி [இங்கு வ என்பது அங்கு ப என மாறும்] என்ற பெயரில் இவளை வெற்றித் தெய்வமாக கொண்டாடும் மக்கள் தம் குழந்தைகளுக்கு வராகியை தனது முன்னோராக உருவகித்து அவளைப் பாட்டிமா [அஜீமா] என்று அழைக்கக் கற்றுக் கொடுத்துள்ளனர்.



Fig. 14 N.-W. Frontier, India.



Fig. 15 Mesopotemia (3000 B.C.)



Fig. 16 Ukraine



Fig. 17 India. (c. 800 B.C.)



Fig. 18 Indus



Fig. 19 Phoenicia. (c. 2500 B.C.)



Fig. 20 Mesopotemia (c. 1400 B.C.)



Fig. 21 Egypt. (c. 2000 B.C.)



Fig. 22 Thrace. (Neolithic)

தாய்த் தெய்வ உருவங்கள்

தமிழகத்தில் அவ்வை என்ற பெயரில் வணங்கப்படும் மூத்த தெய்வமும் இந்த பாட்டிமாவுக்கு நிகரான வழக்காறு எனலாம். [கன்னித் தெய்வம், தாய்த் தெய்வம் மற்றும் பாட்டித் தெய்வம் என மூன்று வடிவங்களில் தனிப் பெண் தெய்வங்களை வழிபடுகின்றனர்.] குஜராத்தில் ஒரு சில இடங்களில் வராகிக்கு கோயில் உள்ளது.

**தமிழகத்தில் புது மலர்ச்சி**

தற்காலத்தில் வராகி வழிபாடு தமிழகத்தில் புத்துணர்ச்சி பெற்று வருகிறது. கோயில் கடைகளில் வராகி மாலை நூல்கள் விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன. சென்னையில் வராகிக்கு பாதாள வராகி கோயில் உண்டு. கோவையில் புதிதாக ஸ்ரீ வராகி மந்திராலயம் என்ற கோயில் எழுப்பபப்பட்டுள்ளது.

வேடந்தாங்கலில் வராகிக்கு பெரிய கோயில் உள்ளது. தஞ்சை பெரிய கோயிலில் வராகிக்குத் தனி சன்னதி உண்டு. இங்கு ஆடி மாதம் பத்து நாள் திருவிழாவும் நடைபெறுகிறது. அமெரிக்கா மலேசியா போன்ற நாடுகளிலும் வராகிக்கு கோயில் எழுப்பபப்பட்டுள்ளது.



மஹா வராகி அம்மன் கோவில், கோயம்புத்தூர்

வராகி மாலை என்ற நூல் வராகி வழிபாட்டுக்குரிய யந்திரம் மந்திரம் ஆகியவற்றை கொண்டிருக்கும் இந் நூலை வீர கவி ராஜர் இயற்றினார். ஸ்தம்பனம் வசியம் மாரகம் என மக்களின் பல தேவைகளுக்கு ஏற்ப இவ்வராகி மாலையில் யந்திரங்களும் மந்திரங்களும் பாடல்களும் உள்ளன.

**வராகி மாலை**

முருகனுக்கு ஆறு திருமாலுக்கு எட்டு சிவனுக்கு ஐந்து என்று அட்சரங்கள் மந்திரங்களாக இருப்பது போல சாக்தத்தில் ஐயும் கிலியும் சவ்வும் என்ற மூன்று எழுத்து மந்திரம் உண்டு. இதற்கு எடுத்துக்காட்டாக வராகி மாலையில் அமைந்த

ஐயும் கிலியும் சவ்வும் எனத் தொண்டர் போற்றும் அரிய பச்சை

மெய்யும் கருணை வழிந்தோடுகின்ற விழியும்

கையும் பிரம்பும் கபாலமும் சூலமும் கண்ணெதிரே

வையம் துதிக்க வருவாள் வராகி என் மலர்க்கொடியே

என்று பாடலைக் கூறலாம் வராகி வழிபாட்டை ஆண்கள் செய்தால் குடும்பம் அமையாது, குழந்தைகள் சரி வராது, சுத்த சந்நியாசியாக இருப்பவனே வராகி உபாசனை செய்வது பலனளிக்கும், சுய கட்டுப்பாடு மிக முக்கியம் அல்லது கால் கைகளை முடக்கிப் போடும் என்று பல கருத்துக்கள் நிலவுகின்றன. பெண்கள் செய்தால் மணவாழ்வு சிறக்காது. கோபம்

அதிகம் வருவதால் குடும்ப அமைதி கேடும். சேர்ந்து வாழாமல் தனித்து வால் நேரிடும் என்றும் நம்பப்படுகிறது. வராகி வழிபாடு தாந்திரீகர்களுக்கு மட்டுமே உரியது; பொது மக்களுக்கு அல்லது குடும்பஸ்தர்களுக்கு உரியது அல்ல என்ற அச்சத்துக்குக் காரணம் வராகி தனித்தெய்வம்; அச்சத்துக்குரிய பெண் தெய்வம்; அவள் பகையை அழித்தல், தண்டனை, மரணம் மற்றும் முக்திக்குரிய தெய்வம் என்ற நம்பப்படுவதே முக்கிய காரணம் ஆகும்.

## மனித வரலாற்றின் அழியாப் பதிவு வராகி

வராகி என்பவள் இரு காலகட்டத்தின் இணைப்பு குறியீடு. இரு முக்கியப் பண்புகளின் வெளிப்பாடு. மனித வரலாற்றில் வேட்டைக் காலத்தின் முடிவாகவும் வேளாண் காலத்தின் தொடக்கமாகவும் புரிந்து கொள்ளப்பட வேண்டிய வரலாற்றுப் பதிவு. இதனால் இவள் ஆத்திரக்காரியாகவும் அதே சமயம் மண்ணைக் கிளறி பொன் விளைய வைக்கும் வளமைத் தெய்வமாகவும் விளங்குகிறாள். முற்காலத்தில் வேளாண் சமுதாயத்தில் சில இடங்களில் காளைகளுக்குப் பதிலாகப் பெண்களை உழவுக்குப் பயன்படுத்தியிருக்கலாம். இன்றும் சில மாநிலங்களில் இப்படி சில சமயங்களில் நடப்பதை நாம் சமுக வலைத் தளங்கள்


வளமைத் தெய்வம்

வாயிலாக அறிகிறோம். ஆக, வேளாண் பணிகளுக்காக மண்ணைக் கிளறுவதன் மிச்ச சொச்சமாகவே இவள் வராக முகத்துடன் நினைவு கூரப்படுகிறாள் காளைகளின் பயன்பாடு வந்த பிறகு பெண்கள் குழந்தை பெறுவதற்கும் வேறு சில வயல் வேலைகளுக்கும் எனப் பணிப் பங்கீட்டுக்கு *[distribution of labour]* ஆளாகியிருப்பர்.

## வேந்தனும் வராகியும்

தானிய லட்சுமி கையில் நெற்கதிருடன் காட்சி தர, அன்ன லட்சுமி கையில் கரண்டியுடன் சாத்விகமாகக் காட்சி தர, வராகி மட்டும் கலப்பை, உலக்கை, மாட்டு வால், காண்டா மணி, போன்றவற்றுடன் காட்சியளிக்கக் காரணம் இவள் சொகுசுத் தேவதை அல்ல. உழைப்புக்



கடவுள், போர்க் கடவுள். வேளாண்மையும் போரும் இணைந்து வருவதற்கு காரணம் நில உடைமைத்துவத்துடன் இணைந்தே ஒரே தலைவனான வேந்தனும் மன்னராட்சியும் வந்தன. இவ்வாறு ஆங்காங்கே மன்னர்கள் உருவானதால் அவர்களுக்குள் நிலத்தைக் [நாட்டைக்] கைப்பற்றும் ஆசையும் பிறந்தது. சமூக மானுடவியல் அறிஞர்கள் ‘உலகில் போர் என்பதே வயல்கள் நிரம்பிய வேளாண்மை சிறந்திருந்த உணவு ஏராளமாகக் கிடைத்த

நாட்டைப் கைப்பற்றும் நோக்கத்துடன் தான் தொடங்கியது என்கின்றனர்.

வீரம் செறிந்தவரால் மட்டுமே நிலத்தைக் கைப்பற்ற முடிந்தது. நிலத்தைப் பாதுகாக்க அதிகம் பேர் தேவைப்பட்டனர். வீடுகளில் பெண்கள் அதிக எண்ணிக்கையில் குழந்தை பெற ஊக்குவிக்கப்பட்டனர். ஒவ்வொரு ஆணும் பல பெண்களை மணந்து குடும்பத்தினரின் எண்ணிக்கையைப் பெருக்கி வேளாண் பணிகளைப் பிரித்துக் கொடுத்து தனது நிலத்தைக் காப்பாற்றினான். இதனால் அவன் வணங்குவதற்கு ஏற்ற தெய்வமாக வராகி விளங்கினாள். வராகி வேளாண் சமுதாயத்தில் பகையை அழிக்கும் வீரக் கடவுளாகப் போற்றப்பட்டாள்.

## வீரத் தேவதை; வெற்றித் தேவதை வராகி

காவிரியின் வேந்தனான ராஜராஜ சோழன் போன்ற மருத நிலத்து மன்னர்கள் மற்ற நிலங்களை கைப்பற்றும் கொள்கையுடன் போருக்குப் போகும் முன்பு வராகிக்குச் சிறப்புப் பூசைகள் செய்து வணங்கிச் சென்றனர். இவ்வாறு வராகி அரசர்களின் ஆதரவு பெற்ற இன்றியமையாத் தெய்வம் ஆனதினால் அனைத்துச் சமயங்களும் அவளைத் தம்முடையவை ஆக்கிக்கொண்டன. புராணங்களும் அவளுக்குப் புதுப்புதுக் கதைகளை

உருவாக்கின. எனினும் இன்று வரை வராகியை தனித்தெய்வம் என்றும் அவள் வீரத்தின் விளைநிலம். வேளாண்மையின் அடையாளம் என்றே உணர வேண்டும்.

## வாராகி விசுக்கிரன் இலாவணி

இலாவணி என்பது தமிழ்நாட்டில் மிகவும் பிரசித்தி பெற்ற ஒரு பாடற்கலையாக இருந்தது.

வராகி பண்டாசுரனுடைய தளபதிகளில் ஒருவனான அரக்கன் விசுக்கிரனைக் கொன்றாள். விசுக்கிரன் படைக்கும் வாராகி படைக்கும் நடக்கிற சம்வாதம் இங்கே இலாவணியாக்கப்படுகிறது.

**வாராகி படை:**

*அரக்கனே விசுக்கிரா இரக்கமு மற்றவனே*
*யாரையடா எதிர்க்கிறாய் சொல்லு சொல்லு*
*அரக்கப்ப ரக்கவிங்கே நெருப்பையு மிழ்ந்துகொண்டு*
*அங்குமிங்குஞ் செல்லுகிறாய் நில்லு நில்லு*

**விசுக்கிரன் படை**

*பன்றிமுகப் பொம்பளையா முன்வந்தெ திர்க்கிறவ*
*பயந்துந டுங்கிடுவா பாரு பாரு*
*கொன்றுனைவி ழுங்கிடுவான் தின்றுனைமு டித்திடுவான்*
*கொம்பனையெ திர்க்கிறவ யாரு யாரு*

**வாராகி படை**

உலக்கையைக் கையெடுத்தா உலகம்கி டுகிடென்னும்
உடைத்துநொ றுக்கிடுவா போடா போடா
வலக்கையி டக்கைகளில் பலமுள்ள ஆயுதங்கள்
மடித்துமு டித்துவிடும் மூடா மூடா

**விசுக்கிரன் படை**

உலக்கையும் ஆயுதமா உலுக்கியெ டுத்திடுவோம்
ஒத்தைக்கொத்தை ஆடலாமா வாவா வாவா
கலக்கும்க லக்கலிலே மலைத்துவி ழுந்திடுவா
காணாமப் போயிடுவா போபோ போபோ

**வாராகி படை**

தண்டநாதா வந்துவிட்டா தண்டனைகள் தந்திடுவா
தைரியமா நிற்கிறவன் வாடா வாடா
கண்டவுடன் வீழ்ந்திடுவே கண்டதுண்டம் ஆகிடுவே
கைகுவித்துச் சொல்லிடாமப் போடா போடா

**விசுக்கிரன் படை**

விசுக்கிரன் வந்துவிட்டேன் பொசுக்கெனக் குத்திடுவேன்
மேலெடுத்து வீசிடுவேன் தூக்கி தூக்கி
நிசிசரர் எங்களது பசியைய றிந்திலிரோ
நின்றபடி தின்றிடுவேன் தாக்கி தாக்கி

**வாராகி படை**

*என்றன்விழி யாலுனையே கொன்றிடுவேன் துப்பிருந்தால்*
*என்றனம்பை நீதடுத்துக் காட்டு காட்டு*
*உன்னுடைய மாயையெலாம் என்னிடத்தில் செல்லாதடா*
*உண்மையிலே சண்டையிட்டுக் காட்டு காட்டு*

**விசுக்கிரன்**

*வந்துவிட்டேன் உன்றனைநான் முந்திவிட்டேன் வாளெடுத்தேன்*
*வானுயரத் தூக்கிவிட்டேன் வாளை வாளை*
*முந்திநீயோர் எட்டுவைத்து வந்திடுமுன் வெட்டிடுவேன்*
*முன்னிருக்கும் உன்னிரண்டு தோளை தோளை*

**வாராகிப் படை**

*தாளெடுத்தாள் தேரிருந்து வாளெடுத்து வீசிவிட்டாள்*
*தலைதுண்டாய்க் கீழ்விழுந்தான் மண்ணில் மண்ணில்*
*தோளுயர்த்தி வானவரெக் காளமிட்டுப் பாவிசைத்து*
*துள்ளித்துள்ளி ஆர்ப்பரித்தார் விண்ணில் விண்ணில்*

**எல்லோரும்**

*பாடலிதைப் பாடுபவர் பாடச் சொல்லிக் கேட்கிறவர்*
*பாரிதனில் வாழ்ந்திடுவார் நன்று நன்று*
*கேடுவிளை நோய்களையும் ஓடவோடச் செய்திடுவர்*
*கிட்டநெருங் காததனை வென்று வென்று*

**(இலந்தை அவர்களின் முக நூல் பதிவு 25-6-2020)**

| கன்னிமார் | மங்கை | இடம் | இறைவன் —இறைவி | தரிசனம் |
|---|---|---|---|---|
| பிராமி | சக்கரமங்கை (வில்வம்) | சக்கரப்பள்ளி (ஐயம்பேட்டை) | சக்கரவாகேஸ்வரர் தெய்வநாயகி | நெற்றிக் கண் |
| மகேஸ்வரி | அரியமங்கை (நெல்லி) | கோவில்பட்டி அருகே | அரிமுக்தீஸ்வரர் ஞானாம்பிகை | கங்கை |
| கவுமாரி | சூலமங்கை (வில்வம்) | ஐயம்பேட்டைக்கு அருகே | கிருத்திவாகேஸ்வரர் அலங்காரவல்லி (சனியும் பைரவரும் அருகருகே இருப்பு) | சூலம் |
| வைஷ்ணவி | நந்திமங்கை (நாவல்மரம்) | நல்லிச்சேரி | ஜம்புநாத சுவாமி அகிலாண்டேசுவரி | திருக்கழல் |
| வராகி | பசுமங்கை (வில்வம்) | பசுபதி கோயில் (மாடக்கோயில் அமைப்பு) | பசுபதீஸ்வரர் பால்வள நாயகி | உடுக்கை |
| இந்திராணி | தாழ்மங்கை (தாழம்பூ) | தாயமங்கலம் என்றழைக்கப்பட்ட ஊர் அழிந்துவிட்டது. ஆலயம் மட்டுமே உள்ளது. | சந்திரமவுலீசவரர் ராஜராஜேஸ்வரி | சந்திரன் |
| சாமுண்டி | திருப்புள்ள மங்கை (ஆலமரம்) | பசுபதி கோயில் பகுதியில் | பிரம்மபுரீஸ்வரர் (ஆலந்துறை நாதர்) சவுந்தர நாயகி | நாகம் |





பிடாரி இளங்காளி அம்மன் கோவில், சென்னை

# *3. கருவளம் காக்கும் மருத நிலத்தெய்வம் பிடாரி*

*தமிழகக் கிராமங்களில் ‘ஊருக்கொரு பிடாரியும் ஏரிக்கொரு ஐயனாரும் வேண்டும்’ என்று சொல்வதில் இருந்து ஏரிப்பாசானம் மூலம் வேளாண்மை சிறந்து விளங்கிய மருத நிலப் பகுதியில் ஒவ்வொரு ஊரிலும் பிடாரிக்குக் கோயில் இருந்தது தெளிவாகிறது. இன்று தென் மாவட்டங்களில் பிடாரி அம்மன் கோயில்கள் சில காணப்பட்டாலும் வட பகுதியிலும் மதுரை போன்ற மத்தியப் பகுதியிலும் அதிகம் காணப்படவில்லை. இருக்கும் ஓரிரு கோயில்களும் துர்க்கை அம்மன் கோயிலென்றே கொண்டாடப்படுகின்றது. பிடாரி கோயில்கள் வேளாண்மை சிறந்து விளங்கும் பகுதியில் காணப்படுகின்றன. மலைப்பாங்கான இடத்திலோ, வறண்ட பகுதியிலோ கடற்கரையிலோ இல்லை. எனவே பிடாரியை மருத நிலத்தெய்வம் எனலாம். 'ஒண்ட வந்த*

பிடாரி ஊர் பிடாரியை விரட்டியதாம்' என்ற பழமொழியும் ஊருக்கு ஒரு பிடாரி கோயில் இருந்ததை உறுதி செய்கிறது. இது தவிர வேற்றூர்ப் பிடாரியையும் புதிதாக தமது ஊரில் கொண்டு வந்து வைத்து வழிபடும் போக்கு இருந்ததையும் அறிகிறோம்.

பிடாரி அம்மனைப் பிடாதி / முப்பிடாதி என்ற பெயரில் தென் மாவட்டங்களில்



முப்பிடாதி அம்மன்

வழிபடுகின்றனர். பிடாரி பற்றி தமிழ்க் காப்பியங்களில் சில தகவல்கள் கிடைக்கின்றன. நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் அவளைக் காளி என்ற பெயரில் குறிப்பிட்டாலும் காளியும் பிடாரியும் ஒன்றல்ல. இருவரும் வெவ்வேறு. காளிக்கு புராணத் தெய்வம் தகுதி உண்டு. பிடாரி என்பவள் புராணக் கதாபாத்திரம் ஆக்கப்படவில்லை. பிடாரி என்பது இறைவியைக் குறிக்கும் பெயர்களில் ஒன்றாக மட்டுமே விளங்குகிறது.

### பிடாரி யார்?

பிடாரி என்பவள் நாகர் குலத்தின் அல்லது தொல் திராவிடர் குலத்தின் தெய்வம் ஆவாள். ஆதியில் தென்னிந்தியா முழுக்க வாழ்ந்த தொல் தமிழர் நாகத்தைத் தமது குலக் குறியீடாகக், குல முதுவராகக் [TOTEM] கருதி வழிபட்டதால் அவர்கள் தம்மை நாகர் இனத்தவர் என்று கருதினர். ஆண்கள் பிடாரன் என்றும் பெண்கள் பிடாரி என்றும் தம்மை அழைத்துக்கொண்டனர். நாகத்தைப் பிடிப்பவன் அல்லது நாகத்திடம் இணங்கிப் பழகுபவன் பிடாரன் எனப்பட்டான். பெண்கள் கொடிய நஞ்சுள்ள நாகத்தைக் கண்டும் அஞ்சாத நெஞ்சம் கொண்டவர் என்பதால் பிற்காலத்தில் யாருக்கும் அஞ்சாத பெண்களை 'அடங்காப் பிடாரி' என்றனர். பாம்புக்கே அஞ்சாதவள் மனிதனுக்கு அஞ்சுவாளா?

*அதனால் அடங்காத பெண்ணை கட்டியவனை 'பிடாரியை பெண்டு வைத்துக் கொண்டது போல' என்று சுட்டிக் காட்டினர். இப் பழமொழியும் பிடாரி என்பவள் யாருக்கும் அஞ்சாத நெஞ்சுரம் கொண்டவள் என்ற பொருளையே தருகிறது.*

## வேட்டைத் தெய்வத்தின் எச்சம் பிடாரி

*மனித குல வரலாற்றை வேட்டைக் காலம், வேளாண் காலம், தொழிற் புரட்சி காலம்; மின்னணு காலம் என நான்கு பெரிய வகைமைகளாகப் பகுக்கலாம். வேட்டைக் காலத்தில் இனக்குழுவின் மூத்த பெண் ஒருத்தி தலைமையில் ஆண்கள் அவளைப் பின் தொடர்ந்து வேட்டைக்குச் சென்று கிடைத்த வேட்டைப் பொருளை அவள் பகுத்துத் தர அனைவரும் உண்டு மகிழ்ந்தனர்.*

*அடுத்த காலக் கட்டத்தில் ஓரிடத்தில் தங்கி அங்கு நிலத்தைப் பண்படுத்தி வேளாண்மை செய்யத் தொடங்கிய போது ஆண் முதன்மை பெறுகிறான். குடும்ப அமைப்பு உருவாகிறது சொத்துடைமை சொத்து உரிமை ஆகியன நடைமுறைக்கு வருகின்றன. [அடுத்த இரண்டு காலங்களைக் குறித்து தற்போது விளக்க வேண்டியதில்லை. அது ஓரளவு தெரிந்ததே].*

வேட்டைக் காலத்தின் ஆற்றல் மிகுந்த தலைவி ஒரு பெண். அவளது தலைமை பண்பும் தாய்மைப் பேறும் கண்டு பயந்து அவளை ஆண்களும் வணங்கினர். அவள் தாய்த் தெய்வத்திற்கும் மூத்த தெய்வம் ஆவாள். இவள் அடங்காதவள்

அடுத்த சில நூற்றாண்டுகளில் குழந்தைப் பேற்றில் ஆண்களின் பங்கு இருப்பதை உணர்ந்ததும் பெண்களை வீட்டுப் பிராணிகளாக்கி விட்டனர். வேளாண் காலத்தில் பெண் அடிமையானாள். வேட்டைக் காலத்திற்கும் முந்தைய காலத்தின் பெண் சிறப்பை உணர்த்தும் தெய்வங்களுள் ஒன்றாக பிடாரி விளங்குகிறாள் இவள் யாருக்கும் அடி பணியாதவள்; அஞ்சா நெஞ்சுரம் கொண்டவள். வேளாண் காலத்தில் இவளுக்கு அடங்கா பிடாரி என்று பெயர் சூட்டப்பட்டிருக்கும். எனவே அனைவரும்அன்று தொட்டு இன்று வரை இவளை அடங்காப் பிடரி என்றனர். அடங்காதவளை அடக்கி ஆள்வதையே ஆண்கள் பெண்டாளுதல் [பெண்டாட்டி] என்ற சொல்லால் குறித்தனர். அடங்காப் பிடாரியை பெண்டு வைத்தது போல என்ற பழமொழியும் இச் சமூகப் பழக்கத்தால் உருவானது. அடங்காத பெண்ணை பெண்டாட்டியாகக் கொள்வது ஆணுக்கு சவாலானது என்பதால் அடக்கமான

பெண்ணையே அனைத்து ஆண்களும் மணமுடிக்க விரும்பினர். இன்று காலமும் கருத்தும் மாறியிருக்கிறது.

## திராவிடர்களின் நாகர் வழிபாடு

பிடாரி வேட்டை காலத் தெய்வத்துக்கும் முந்தைய தெய்வம் ஆவாள். உலகின் தென்பகுதியில் அல்லது நாவலந்தீவில் வாழ்ந்த ஆதிகாலத்து மனிதர்கள் நாகர்கள் எனப்பட்டனர். ஏனெனில் நாகர் வழிபாடுஅன்று இப்பகுதி முழுக்க பரவியிருந்தது. பவுத்தம் தன் சமயத்தை கீழைத் தீவுகளில் பரப்பிய போது அங்குப் புழக்கத்தில் இருந்த நாகர் வழிபாட்டைத் தன்னுடையதாக்கியது. இந்தியாவின் பல பகுதிகளில் குறிப்பாக மலை பகுதிகளில் திராவிடர் வாழ்ந்த இடங்களில் நாகர் வழிபாடு செழித்திருந்தது. இன்றும் தென்னிந்திய மாநிலங்கள் அனைத்திலும் நாகர் வழிபாடு நீக்கமற நிறைந்திருக்கிறது, தமிழ்நாட்டில் எல்லா கோயில்களிலும் நாக வழிபாடு ஏதேனும் ஒரு வடிவில் இருக்கிறது. சிவன் திருமால் ஆகியவர்களோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. மலையாளத்தில் ஆந்திராவில் கர்நாடகத்தில் என அனைத்து மாநிலங்களிலும் கிழக்காசிய தீவுகளிலும் ஆப்பிரிக்காவிலும் நாகர் வழிபடு தெய்வமாக உள்ளது என்பதை க. ப. அறவாணன் ஐயாவின் SERPENT CULT நூல் வாயிலாக அறியலாம்.



நாகர் வழிபாடு

தொல் பழங்காலத்தில் வெப்ப பூமியான தென்னிந்தியாவில் அல்லது திராவிட நாட்டில் படம் எடுத்து ஆடிய நாகப் பாம்புகளில் இருந்து தான் மனித குலம் தோன்றியதாக மக்கள் நம்பினர். இந்நம்பிக்கை ஒன்றும் மூட நம்பிக்கை அல்ல. இது ஓர் ஆரம்பக்கட்ட அறிவியல் தேடல் என இனவரைவியல் அறிஞர் கருதுகின்றனர். மண்ணுக்குள் இருந்து வெளியே வந்து மீண்டும் மண்ணுக்குள் போகும் பாம்பை மனிதர்கள் தம் மூதாதையராகக் கருதினர். அதன் பெயரால் தம்மை நாகர்கள் என்று அழைத்து கொண்டனர்.

## குல முதுவர் வழிபாடு

உலகெங்கும் ஆதி காலத்தில் ஏதேனும் ஒரு விலங்கு, பறவை, செடி, கொடி, மரம் போன்றவற்றை தமது குல முதுவராகக் [TOTEM] கருதும் பழக்கம் இருந்து வந்ததை சர் ஜேம்ஸ் ஃபிரேசர் என்னும் அறிஞர் பன்னிரெண்டு பாகங்களாக எழுதிய தனது நூலில்

*ஆதாரங்களோடு விளக்கினார். தமிழகத்தில் பல பகுதிகளில் தங்களை நாகர் கூட்டம், குருவிக் கூட்டம், செங்கீரை கூட்டம், காடை கூட்டம் என்று அழைக்கும் மரபு உண்டு. இவர்கள் தம் கூட்டத்தின் விலங்கு, பறவை, செடி, கொடியை உண்பது [எச்சில்படுத்துவது] கிடையாது. இப்போது இருப்பவர்களுக்கு காரணம் தெரியாது ஆனால் முன்னோர்கள் குலக் குறியீட்டை தமது குல முதல்வராகக் கருதி வழிபட்டு வந்தனர். இவ்வழிபாட்டை ஆதிகாலச் சமயத்தின் குல முதல்வர் வழிபாடு [TOTEMIC WORSHIP OF PRIMITIVE RELIGION] என்பர் சமயவியல் அறிஞர்கள்*

***பிடாரன் - பிடாரி***

*பிடாரி அம்மனின் பெயர்க் காரணம் பற்றி அறிய முற்படும் போது அச்சொல்லை பீட ஹரி எனப் பிரித்து தீமைகளை அழிப்பவள் என்று வைதீகர்கள் பொருள் சொல்கின்றனர். இது ஏற்புடையதன்று. நாட்டார் தெய்வங்களை சமஸ்கிருதமாக்குவதால் அவை நிறுவனச் சமயத் தெய்வங்கள் [DEITIES OF INSTITUTIONAL RELIGIONS] ஆகி விடா. இது ஒருவிதமான உயர்நிலைப்படுத்தும் முயற்சி ஆகும். பேச்சியம்மனை பேச்சுக்குரிய அம்மன் என்றும் சரஸ்வதி என்றும் கூறுவது ஏற்புடையதாகாது. அவள் பேய்ச்சி; யட்சிணி போன்றவள். பிள்ளை*

தின்னி ராக்காச்சி [இடாகினி போல] போன்ற துடியான பெண் தெய்வங்கள் இன்னும் உயிர்ப்போடு உள்ளன அவற்றின் தனித்தன்மையை அறியாமல் பொதுமைப்படுத்தக் கூடாது. ‘எல்லாம் இதன் பால் உள’ என்று திருவள்ளுவமாலை திருக்குறளை வாழ்த்துவது போல எல்லாத் தெய்வங்களையும் இந்து சமயத் தெய்வம் என்ற பேரெல்லைக்குள் கொண்டு தள்ளக் கூடாது.

பிடாரி என்பவள் நாகர் குலம் என்று அழைக்கப்பட்ட திராவிடர் அல்லது தமிழர் இனத்தின் ஆதி தெய்வம். திராவிடம் தமிழ் என்ற பெயர்கள் காலத்தால் பிந்தியன. அவை மொழி இனம் என்ற அடிப்படையில் பெற்ற பெயர்கள் நாகர் இனம் என்பது வழிபாட்டின் அடிப்படையில் உருவான பெயர். பிடாரி குழந்தை பிறப்புடனும் இறப்புடனும் தொடர்புடைய பெண் தெய்வம் ஆவாள். பிறப்புடன் தொடர்புடையவள் என்பதால் இவளைத் தாய்த் தெய்வம் என்றும் இறப்பு, சுடுகாடு, போன்றவற்றுடன் தொடர்பு கொண்டிருப்பதால் அடங்காதவள், அழிவுக்குக் காரணமானவள் என்றும் நம்பிக்கை நிலவுகிறது.

**மருதநிலத் தெய்வம் பிடாரி**

பிடாரியை வேளாண் தொழில் செய்வோர் கரு வளம் வேண்டி வழிபட்டனர். பிறக்கும்



**மருதநிலக் குடும்பம்**

பிள்ளைகள் ஆரோக்கியத்துடன் பிறக்கவும் பிறந்த பிள்ளைகள் நோய்க்கும் பேய்க்கும் பலியாகிவிடாமல் காக்கவும் வழிபட்டனர். நாகர் குலம் எனப்படும் தொல் தமிழர் குலம் தழைக்க வழிபட்டனர். வேளாண்மை செய்தவர்களுக்கு ஆட்களின் எண்ணிக்கை அதிகம் தேவை. அதிக பிள்ளைகளை பெறும் பெண்ணை மக்களை பெற்ற மகராசி என்று போற்றினர். எனவே பிடாரியிடம் பிள்ளைகளைக் காப்பாற்றி தர வேண்டும் என்ற ஒற்றை வேண்டுகோளை வைத்து வணங்கினர். கருக்காத்தம்மன் என்று பிடாரியை போற்றினர். பல இனத்தைவர் குல சாமியாகவும் கொண்டனர். கரு வளம் காத்து மக்கள் எண்ணிக்கையைப் பெருக்கிய பிடாரி

(முப்புடாதி, பிடாரி மீனாட்சி) மருத நிலத்தவரின் முக்கிய வழிபடு கடவுள் ஆனாள்.

**காப்பியங்களில் பிடாரி**

தமிழில் காப்பியங்கள் இயற்றப்பட்ட போது தமிழ் நாட்டில் ஆசிவகம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் இருந்தன. சிலப்பதிகாரத்திலும் நீலகேசியிலும் பிடாரி பற்றிய குறிப்புகளை காண்கிறோம். இக்காப்பியங்கள் மருத நிலம் சார்ந்தவை. எனவே பிடாரியும் செழிப்பான பகுதியில் வணகங்கப்பட்டிருப்பது தெளிவாகிறது.

சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியம் எனப்படும். அது மன்னர்கள் அல்லது கடவுளர் பற்றியதன்று. பாண்டியன் அவைக்கு நீதி கேட்க வந்து வாயிலில் நின்ற கண்ணகியைப் பற்றி மன்னனிடம் தகவல் தெரிவித்த வாயில் காப்பாளன் அவளைப் பிடாரி போலத் தோன்றுகிறாள் என்கிறான்.

நீலகேசியில் சுடுகாட்டுக்குள் இருக்கும் பிடாரி கோயிலில் ஒருவன் ஆடு வெட்டிப் பலி கொடுக்க வரும் போது முனி சந்திரன் என்ற துறவி அதனைத் தடுத்து நிறுத்துகிறார். உயிர்க் கொலை கூடாது என்று போதிக்கிறார். களிமண்ணால் ஆட்டுக்குட்டி செய்து அதனை

வெட்டுமாறு குறிக்கிறார். அவனும் அவ்வாறே செய்கிறான்.

பிடாரி என்ற தெய்வத்துக்குத் தனிக் கோயில் இருந்ததை நீலகேசி தெரிவிக்கிறது. அங்கு குழந்தை வரம் வேண்டி உயிர்ப் பலி கொடுக்கும் பழக்கம் இருந்ததையும் அறிகிறோம். நீலகேசி என்ற காப்பியம் தமிழில் முதன் முதலில் தோன்றிய நூல் அன்று. அந்நூல் ஒரு மொழிபெயர்ப்பு நூல். அந்நூலிலும் பிடாரி வழிபாடு காணப்படுகிறது. பிடாரி பிறப்பு மற்றும் இறப்புடன் தொடர்பு படுத்தப்பட்ட கடவுளாக இருந்திருக்கிறாள்.

## பிடாரிக்குரிய புராணக் கதை

தென் தமிழகத்தில் வில்லுப்பாட்டில் பிடாரிக்குரிய கதை பாடப்படுகிறது. சிவபெருமானுடன் பார்வதி சல்லாபித்திருந்த வேளையில் விளையாட்டாக அவள் சிவபெருமானின் கண்களை மூடினாள். விளையாட்டு வினையாகி விட்டது. சிவபெருமான வெகுண்டார். பார்வதியைப் பாதாளலோகத்தில் வசிக்கும் நாக கன்னிகையின் வயிற்றி பிறக்கும்படி சபித்தார். சாபம் கொடுத்தும் கோபம் தணியாத சிவ பெருமான் முன்பு தன்னிடம் பிள்ளை வரம் கேட்டிருந்த நாக கன்னியிடம் பார்வதியை

எட்டுத் துண்டங்களாக வெட்டிக் கூறு போட்டுக் கொடுத்தார். நாக கன்னி தான் இட்ட பாம்பு முட்டைகளுடன் இந்த எட்டுத் துண்டங்களையும் அடைகாத்து வந்தாள். எட்டும் ஆக்ரோஷத்துடன் அஷ்ட காளிகளாக வளர்ந்தன. ஆடி மாதத்தில் செவ்வாய்க்கிழமை அன்று சரியான ராகு காலத்தில் எட்டும் அஷ்ட காளிகளாகப் பிறந்தன. இவர்களில் மூன்றாவதாக பிறந்த முப்பிடாரி அல்லது முப்பிடாதி என்பவள் இரும்பு, வெள்ளி, தங்கக் கோட்டைகளைத் தகர்த்த திரிபுர சுந்தரி என்று போற்றப்படுகிறாள். இக்கதை தென் தமிழகத்தில் வழங்கி வரும் கதை ஆகும்.

## நாட்டார் தெய்வங்கள் எட்டுப் பேர்

அஷ்டகாளி எனப் பிறந்த எட்டுப் பேர்களில் மூன்றாவதாக இருப்பவளே பிடாரி எனப்படும் முப்பிடாதி என்று நம்புகின்றனர். பிடாரியை ‘பிடறி’ என்பதோடு பொருத்தி அவள் மூன்று முகங்கள் கொண்டவள் மூன்று பிடறி கொண்டவள் என்று கதை கட்டியுள்ளனர். எட்டுப் பேர் வருமாறு

1. முத்துமாரி அல்லது முத்தாலம்மன்
2. மாகாளி அல்லது பத்ரகாளி
3. முப்பிடாரி அல்லது முப்புடாதி

4. உலகளந்தாள் அல்லது உலகநாயகி
5. அரியநாச்சி அல்லது நாகாத்தம்மன்/ நாகவல்லி
6. சென்பகவல்லி அல்லது செல்லி
7. சந்தனமாரி அல்லது சண்ட மாரி / ஆகாச மாரி
8. காந்தாரி



இந்த எட்டுப்பேரும் ஒரே அம்சமாகி சாமுண்டிஸ்வரியாகி மகிஷனைக் கொன்றனர். அவன் தான் இறக்கும் தறுவாயில் தன்னை சிம்மமாக்கும்படி சாமுண்டிசுவரியிடம் வேண்டினான். அவளும் அவனுக்கு அருள் வழங்கி அவனைச் சிம்மமாக்கிப் பின்பு தனது வாகனமாகவும் ஏற்றுக்கொண்டாள். இதனால் அவள் சிம்ம வாகினி என்று பெயர் பெற்றதாக 16, 17 ஆம் நூற்றாண்டுகளில் புனையப்பட்ட நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் கூறுகின்றன.

## பொதிகையும் பிடாரி புராணமும்

பிடாரி தொல் தமிழர் தெய்வமாக இருந்தாலும் அத்தெய்வ வழிபாட்டைப் பாதுகாத்து வைத்தது பௌத்த மதம் ஆகும். பௌத்தம் மண்ணின் தெய்வங்களைப் பாதுகாத்து தனது மதத்தைப் பரப்பியது குறிப்பாக பெண் தெய்வங்களின் வழிபாட்டைப் பாதுகாத்தது. இதனால் பௌத்த சமயத்தில் பிரிவுகள் தோன்றின. வஜ்ராயன் என்ற பௌத்த பிரிவு பெண் தெய்வ வழிபாட்டுக்கு மதிப்பளித்தது. பிடாரியில் பௌத்த செல்வாக்கை உறுதி செய்யும் சில வரலாற்று தகவல்கள் உள்ளன

பிரம்மனுக்கும் தானாவதிக்கும் பிறந்த எட்டுப் பேர் பொதிகை மலைக்கு வருவர். இவர்கள்



*திருக்குற்றால மலையில் திரும்பிப் பார்த்தான் பாறையிலிருந்து 30 அடி தூரத்தில் காணும் சப்தகன்னியர் (படம். சண்முகக்குமார், தென்பொதிகை ஆவணக் காப்பகம்)*

எட்டுப் பெரும் மகிஷாசுரனை அழிக்க பிறந்தவர்கள் ஆவர். இக்குழந்தைகள் நாகலோகத்தில் உதித்தவர் ஆவார். இவர்களில் மூன்றாவது பெண் முப்பிடாரி எனப்படும் முப்புடாதி ஆவாள். இவர்கள் பொதிகை மலைக்கு இவர்கள் வந்தனர் என்ற குறிப்பு பொதிகை வாழ் போதிசத்துவர்களால் பிடாரி தெய்வமாக வழிபடப்படும் செல்வாக்குப் பெற்றதைப் புலப்படுத்துகிறது. திருக்குற்றால மலையில் பல இடங்களில் ஏழு கன்னிமார் எனப் போற்றப்படுவோரின் புடைப்புச் சிலைகளும் வஜ்ராயன பௌத்த மதம் அங்கு

செலவாக்குப் பெற்றிருந்ததற்கான ஆதாரங்களும் காணப்படுகின்றன.

## பௌத்தமும் பிடாரியம்மனும்

பிடாரியம்மன் பற்றி வழங்கும் கதைகள் சைவம் தழைத்தோங்கிய பிறகு அவளது முக்கியத்துவம் கருதி புராணச் சாயல் பெற்றன. எழு பேர் எட்டுப் பேர் என்ற எண்ணிக்கை அவ்வப் பகுதிகளில் வழிபட்டு வந்த பெண் தெய்வங்களையும் ஒன்றாகச் சேர்த்துக் கொண்ட கதையாகும்.

## பிடாரிக்குக் கோயில்கள்

மருத நிலத்துத் தெய்வமான பிடாரிக்கு கருவளம் காக்கும் நோக்கில் கோயில் கட்டி வழிபாடுகள் நடத்தப்பட்டன. முப்பிடாரி அல்லது முப்புடாதிக்கு பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருந்த கேரளாவிலும் [பாலக்காடு] தென் தமிழ் மாவட்டங்களில் கடையம், செந்தட்டி, ஆழ்வார்க்குரிசி பரம்பு, புளியங்குடி, மேலத் தாழையூத்து ஆகிய ஊர்களில் கோயில்கள் உள்ளன். ஊர்த் தெய்வங்களின் பெயருடன் சேர்த்து பிடாரி அரசியம்மன் என்றும், பிடாரி மீனாட்சி அம்மன் என்றும் புதிய பெயர்கள் சூட்டி வணங்குகின்றனர்



மீனாட்சி பிடாரி அம்மன்

பௌத்தம் ராஜராஜ சோழன் காலம் வரை செல்வாக்குப் பெற்றிருந்த தஞ்சை, திருச்சி, அரியலூர், பட்டுக்கோட்டை பகுதிகளில் பிடாரிக்குக் கோயில்கள் உண்டு. போதிசத்துவர்கள் மிகுதியாக வாழ்ந்த மலையாள நாட்டிலும் பொதினி எனப்பட்ட பழனி மலைக்கு அருகில் உள்ள மூணூர், கேசரப்பட்டி போன்ற இடங்களிலும் பிடாரி

வழிபாடு இன்றும் நடந்து வருகிறது. இதனால் இப்பிடாரி வழிபாட்டை ஊக்குவித்து பாதுகாத்தவர்கள் பௌத்தர்கள் என்பது புலனாகின்றது.

மயிலை, சீனி, வேங்கடசாமி என்ற தமிழறிஞர் பௌத்த பெண் தெய்வமான தாரா தேவி கோயில் பிற்காலத்தில் பிடாரியம்மன் கோயிலாக உருமாற்றம் பெற்றது என்பார். வேறு சிலர் ஒலிப்பு ஒற்றுமை கருதி தாராதேவி கோயில் திரவுபதி கோயில் என பெயர் மாற்றம் பெற்றது என்பர். மணிமேகலை, சம்பாபதி, தாராதேவி, பத்மாவதி போன்ற பௌத்த பெண் தெய்வங்கள் சைவ சமய எழுச்சிக்குப் பின்பு காளியம்மன், மாரியம்மன், செல்லாண்டியம்மன், பக்வதி அம்மன், எனப் பெயர் மாற்றம் அடைந்தது உறுதிப்படுத்தப்பட்ட வரலாறு.



செல்லாண்டியம்மன் கோவில், நாமக்கல்

## இன்றும் பிடாரிக்கு நரபலி

*புதுக்கோட்டைக்கு அருகே மேலப்பட்டியில் பிடாரியம்மனுக்கு தனிக் கோயில் உண்டு. அங்கு இன்றும் தொடர்ந்து உயிர்ப் பலி கொடுப்பது நடைபெறுகிறது. அண்மையில் அங்கு தனது மூத்தாளின் பெண் குழந்தையைக் கணவனோடும் மந்திரவாதி ஒருவரின் துணையுடனும் ஒரு பெண் பலி கொடுத்தாள். இச் செய்தி அனைத்துத் தமிழ் நாளிதழ்களிலும் தொலைக்காட்சி செய்தி ஊடகங்களிலும் வெளிவந்தது. குழந்தைக்காகப் பிடாரிக்கு பலி கொடுப்பதும் செல்வத்துக்காக குழந்தையைப் பலி கொடுப்பதும் அன்று முதல் இன்று வரை நடைமுறையில் இருந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். பிடாரி உயிர்ப்பலி கேட்டுப்பெறும் தெய்வம்.*

## குழந்தையைக் காக்கும் பிடாரியம்மன்

*தென்னிந்தியா, ஆப்பிரிக்கா, தென்கிழக்காசியத் தீவுகளில் வாழ்ந்த நாகர் இனத்தினர் பிடாரியை தம் குலம் தழைக்கச் செய்யும் கடவுளாகப் போற்றினர். அங்கு அவள் காவல் தெய்வம். இன்றும் குழந்தை மரணத்தைத் தடுக்கும் கடவுளாகக் கருதி கருக்காத்தம்மன் என்ற பெயரிலும் சில இடங்களில் பிடாரியை வாங்குகின்றனர். நாக தோஷம் இருந்தால்*

கருத்தங்காது. வயிற்றில் உள்ள கருவை நாகம் தீண்டிவிடும். அதனால் கரு அழிந்துவிடும், நாகப்பாம்பை அடித்துக் கொன்றால் குடும்பம் விருத்தி ஆகாது என்று மக்கள் நம்பினர். தமது குல முதுவரான நாகத்தை கோபப்படுத்தக் கூடாது நாகத்தின் சாபத்துக்கு ஆளாகக் கூடாது என்ற ஆதி கால நம்பிக்கை இதற்கு முக்கியக் காரணம் ஆகும். எனவே பிடாரி அமம்னை வழிபட்டால் நாக தோஷம் தீரும் என்று நாகருக்கும் பிடாரிக்கும் சிறப்பு வழிபாடுகள் நடத்தினர் .

பிடாரனும் பிடாரியும் நாகத்தை தமது வசப்படுத்தும் ஆற்றல் பெற்றவர்கள். எனவே பிடாரியால் கருவை நாகம் தீண்டாமல் நாகத்தால் வயிற்றில் இருக்கும் சிசுவுக்கு எந்தப் பாதிப்பும் வராமல் காப்பாற்ற முடியும் என்று நம்பி அவளை வணங்கி வந்தனர். இதனால் அவளைக் கருக் காத்த அம்மன் என்ற பெயரிலும் அழைத்தனர்.

## பிடாரிக்குரிய மருத நிலக் கோயில்கள்

தமிழகத்தில் பிடாரிக்குரிய கோயில்கள் மலைப்பகுதியிலோ கடற்கரையிலோ கிடையாது. இவள் முதன்முதலில் வேளாண் காலத்தில் வேளாண் தொழில் செய்தரால் வணங்கப்பட்டதால் இவள் காவிரி பாயும்

*தஞ்சை திருச்சி, கோவை மாவட்டங்களிலும், வையை பாயும் மதுரைக்கருகே திருவேடகம் முதலான மிகச் சில இடங்களில் துர்க்கையம்மன் என்ற பெயரிலும் தாமிரபரணி பாயும் திருநெல்வேலி மாவட்டத்தில் முப்புடாதி என்ற பெயரிலும் வணங்கப்படுகிறாள்.*

*கோவை மாவட்டத்தில் காங்கேயம் அருகே பிடாரி அம்மன் பொருள் தந்த கோத்திரத்தாருக்குக் குல தெய்வமாக விளங்குகிறாள். இவள் கோயில் கொண்டிருக்கும் ஊர் பிடாரியூர் என்றே அழைக்கப்படுகிறது. கொங்குவேளாளக் கவுண்டர் பிரிவின் குல சாமியாகத் திகழ்கிறாள்.*

*சிவகங்கையில் பிடாரியம்மனுக்குத் தனி கோயில் உண்டு. தஞ்சாவூரில் பாலகாத்தவராயன் கோயிலில் பிடாரியம்மனுக்கு கோயில் உண்டு. புதுக்கோட்டையில் குலமங்கலத்தில் கோயில் கோபட்டிருக்கும் பிடாரிக்கு ஆண்டுதோறும் மது எடுப்பு விழா சிறப்பாக நடைபெறும். சேலத்தில் எல்லை பிடாரி அம்மன் என்ற பெயரில் எல்லைக் காவல் தெய்வமாக விளங்குகிறாள். விழுப்புரம் அருகே காட்டுப்பையூரிலும் தஞ்சாவூர் அருகே கீழப் பூந்துருத்தியிலும் பிடாரிக்குக் கோயிகள் உள்ளன. மதுரையில் வெள்ளியங்குன்றம் என்ற ஊருக்கு அருகேயுள்ள புதுரில் பிடாரி கோயில் இருக்கிறது.*

*சோழர் காலத்தில் கல்வெட்டு ஒன்று பிடாரி கோயிலுக்கு குளம் வெட்டுவதற்காக வெற்றிலை விற்போரிடம் இருந்து ஒரு கழஞ்சு போன் தண்டமாக வசூலிக்கப்பட்டதாகத் தகவல் தெரிவிக்கின்றது. தமிழர்கள் அதிகம் வாழ்கின்ற கோலார் தங்க வயலுக்குள் பிடாரிக்கு கோயில் உண்டு*

*சென்னையில் பிராட்வே பகுதியில் பிடாரியம்மன் கோயில் தெரு உள்ளது. பிரகாசம் சாலையில் இருந்த பிடாரி கோயிலின் தெய்வத்தை இப்போது ஏகவல்லி என்று அழைக்கின்றனர். 1821இல் இங்கு ஆளுநராக இருந்த எல்லிஸ் அமம்ப ஊர்வலத்துக்கு ஏற்பாடுகள் செய்தார். தலைமை செயலகம் இருக்கும் ஜார்ஜ் கோட்டையின் வடக்கு வாயிலில் முன்பு பிடாரிக்குக் கோயில் இருந்தது, தற்போது அதனை ஏகவல்லி என்று அழைக்கின்றனர்.*

*ஏகவல்லி, ஏகாத்தம்மன் ஆகிய பெயர்கள் இவள் எந்த ஆண் தெய்வத்துடனும் ஜோடி சேராத ஒற்றையாக இருக்கும் தனித் தெய்வம் என்பதை உணர்த்துகிறது. நாகர் தெய்வம் என்பதையே நாகாத்தம்மன் என்ற பெயர் விளக்குகிறது.*

பிடாரியை தனிப் பெயரில் வழிபடாமல் கூடவே இன்னொரு பெயரையும் சேர்த்து அழைக்கும் மரபு காணப்படுகிறது. அவள் அடங்காப் பிடாரி என்பதால் அமைதிப்படுத்த வேறு பெயர் சேர்த்து பிடாரி அரசி, பிடாரி மீனாட்சி என்று சாந்தப்படுத்தி அழைக்கின்றனர். நாமக்கல் அருகே ஒருவந்தூரில் பிடாரிக்கு கோயில் உள்ளது. இவள் மோகனுர் நகரைப் பார்த்தபடி கோயிலில் வீற்றிருப்பதால் அவ்வூர் செழிப்பாக விளங்குகிறது என்றும் நம்புகின்றனர். நீலகேசி காப்பியத்தில் சுடுகாட்டு அருகே இருந்த பிடாரி பின்னர் ஊரின் வளமைத் தெய்வமாகி விட்டதையும் காணமுடிகிறது. இங்கு சடச்சி, பேச்சி, பட்டவன், மதுரை வீரன், சப்த கன்னி, மலையாளக் கருப்பசாமி போன்றோர் பரிவார தெய்வங்களாக இருக்கின்றனர்.

அலமதி பிடாரி ஏகாத்தம்மன் கோயில் என்றொரு கோயில் உண்டு. இவள் நாக தேவதை. ஏரிக் கரையில் எறும்புப் புற்றில் அமர்ந்த எலுமிச்சை நாயகி என்று இவளைப் போற்றுகின்றனர். இவள் ஏழு கிராமங்களில் தொடர்ந்து பெய்த அடை மழையால் ஏரி உடையாமல் காத்தவள் என்று போற்றி வணங்கப் பெறுகிறாள்.

பூ போல தோன்றியவள் என்ற பொருளில் அலமதி, அலர்மது என்ற பெயரில் பிடாரியை சாந்த நாயகியாக வணங்குகின்றனர்.

## சூலப்பிடாரியும் தூக்குதேர்த் திருவிழாவும்

தஞ்சை மாவட்டத்தில் பட்டுக்கோட்டை அருகே சூரப்பள்ளம் என்ற ஊரில் உள்ள பிடாரி அம்மனை, சூலப் பிடாரி அல்லது சூரமகா காளி என்று அழைக்கின்றனர். இங்கு மூன்று நூற்றாண்டுகளாகத் தூக்கு தேர் திருவிழா நடைபெறுகின்றது. தேரில் அம்மனை வைத்துத் தேரையே தூக்கி வரும் இத்திருவிழா சாளுவன் நாயக்கர் காலத்தில் தோன்றியது. அப்போது சாமியை அழைத்து வந்த தேர் மண்ணுள் புதைந்ததால் அன்று முதல் இங்கு வாழும்



மக்கள் தேரை தூக்கி கொண்டே நகர் வலம் வருகின்றனர். இங்கு நடக்கும் பத்து நாள் திருவிழாவில் கடைசி நாள் அன்று சூலப் பிடாரி வலம் வருவாள். இவள் துர்சக்திகளை விரட்டி மறு நாள் வரும் தேருக்கு வழிகாட்டியாக அமைவதால் இவளை வழிகாட்டிப் பிடாரி என்று அழைக்கின்றனர். பிடாரி அம்மன் கெட்ட ஆவிகளையும் தீய சக்திகளையும் அகற்றி மக்களைக் காக்கும் காவல் தெய்வம் என்பதால் இவளுக்கு எடுக்கப்படும் விழா என்பதை விழா நிகழ்ச்சிகள் மூலமாக் அறியலாம். இன்று பிடாரியில் கையில் சூலாயுதம் ஒன்றைக் கொடுத்து அவளை சூல ப் பிடாரி என்றாலும் கூட அவள் பெண்ணின் கருவரையில் இருக்கும் கருவை அல்லது சூலைக் காக்கும் அம்மன் என்பதால் அவளுக்கு சூல பிடாரி என்று பெயர் தோன்றியது. காலப் போக்கில் பெயர் காரணம் மறைந்து பெயர் மட்டும் தங்கிவிட்டது.

## நிறைவு

பிடாரி அம்மன் ஆதி மனித குலமான நாகர் குலத்தின் மூத்த காவல் தெய்வம். குலம் காக்கும் பெண் தெய்வம். இவள் உயிரைக் கொடுப்பவள் அல்ல. இவள் வேட்டைக் காலத்துக்கும் முந்தைய பெண் தெய்வம் என்பதால் பகை அழிக்கும் தெய்வம் ஆவாள். பாதுகாக்கும் தெய்வம் ஆவாள். கண்ணுக்குக் கண் பல்லுக்குப்

பல் என்பது போல ஒரு உயிருக்குப் பதிலாக மறு உயிரைக் காவு வாங்கும் கோபக்காரத் தெய்வமும் ஆவாள்.

பெண் ஆதிக்க காலத்துத் தெய்வம் என்பதால் பிடாரி ஆணுக்கும் அடங்க மாட்டாள். யாருக்கும் அடங்க மாட்டாள். அதனால் அவள் அடங்காப் பிடாரி. அவளைப் பெண்கள் தம் குழந்தையைக் காக்கும்படி வேண்டி வணங்குவதைக் கூட ஆண்கள் ஆதரிக்கவில்லை. ஆணாதிக்கச் சமயங்களான வைதிகச் சமயங்களும் ஆதரிக்கவில்லை.

காளியுடன் ஆட்டத்தில் போட்டி போட்டு அவளைத் தோற்கடித்த சிவனின் ஆட்டமும் தென்மதுரையின் அரசி மும்முலையாளான மீனாட்சியைப் போரில் தோற்கடித்து அவளை நாணப்பட வைத்து மணந்துகொண்ட சொக்கனின் திருவிளையாடலும் பிடாரியிடத்தில் செல்லுபடியாகவில்லை.

அவள் பாம்புப் பிடாரி என்பதால் அவள் ஆதி காலத்தின் அடங்காத பெண். ஆதி காலத் தலைவி. அவளை வெல்லக் கூடிய ஆண் தெய்வம் இங்குப் படைக்கப்படவில்லை. அதனால் அவளுக்குச் சைவ வைணவக் கோயில்களில் காளிக்கும் வராகிக்கும் கொடுத்த முக்கியத்துவத்தைக் கூட தரவில்லை. அவளை



பிடாரி காளி

வணங்கும்படி சமூகத் தலைவர்களோ சமயத் தலைவர்களோ மக்களை ஊக்குவிக்கவும் இல்லை. பிடாரிக்கு சுடுகாட்டில் அல்லது ஊருக்கு வெளியே சில கோயில்கள் மட்டுமே இருந்தன. யாருக்கும் அடங்காத பிடாரி இச்சமுகத்திற்குத் தேவையற்றவள் ஆனாள். அதனால் புறக்கணிக்கப்பட்ட தெய்வமாகி விட்டாள்.



## 4. உரம் அருளும் குப்பை நாச்சியார் - தவ்வை

தவ்வை என்று இலக்கியத் தமிழிலும் ஜேஷ்டா தேவி என்று வடமொழியிலும் குப்பை நாச்சியார் என்று நாட்டார் வழக்கிலும் குறிப்பிடப்பட்ட தெய்வம் எட்டாம் நூற்றாண்டில் தனி சந்நிதி பெறும் அரசச் செல்வாக்குடன் விளங்கி பதிமூன்றாம் நூற்றாண்டில் மூதேவி என்று இகழப்பட்டது. இத்தெய்வத்தின் வரலாறு மனித குல வரலாறு தொட்டு தமிழக மண்ணின் வரலாற்றுடன் இணைந்ததாகும்.

மண் வளம் செழிக்கவும் மக்கள் நலம் காக்கவும் உதவும் வேளாண்மைத் தொழிலில் உரமிடுதல் பயிர் வளர்ச்சிக்கு உற்றதுணையாக விளங்குகிறது. இன்று ரசாயன உரங்கள் பெருகி பயிர் வளத்தையும் சத்தையும் கெடுத்து வருவதால்



தவ்வை தாய்

இன்று வேளாண் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பலரும் இயற்கை உரம் மற்றும் பஞ்சகவ்யத்துக்கு மாறி வருகின்றனர். மாட்டுச் சாணியின் மகத்துவம் பற்றிய விழிப்புணர்வு பரவி வருகிறது. நெகிழ்மம் எனப்படும் பிளாஸ்டிக் பொருட்கள் பெருகியிருப்பதால் அவை மண்ணில் கொட்டப்படும் போது மட்குவதில்லை எனவே மட்கும் குப்பை,

மட்காத குப்பை எனப் பிரித்துத் தாருங்கள் என்று தூய்மைப் பணியாளர்கள் கேட்டு தனித்தனியாக வாங்கிக் கொண்டு போகின்றனர். இன்றிருக்கும் குப்பை பற்றிய அறிவு அந்தக் காலத்திலும் நமது மக்களுக்கு இருந்தது. அவர்கள் வீட்டின் ஓரத்தில் ஒரு குழியை வெட்டி அங்கு மாட்டுச் சாணியை கொட்டி வைத்தனர். மரத்தில் இருந்து உதிர்ந்த இலை, தழை, நறுக்கிய காய்கறியின் தோல், விதை, கோட்டை போன்ற மட்கும் குப்பைகளைப் போட்டு வைத்தனர். இவை நன்கு மட்கிய பிறகு வண்டிகளில் அள்ளிச் சென்று நிலங்களில் உரமாகப் போட்டனர். சில இடங்களில் தீ வைத்து எரித்து சாம்பலை அள்ளிச் சென்று வயல்களில் தூவினர். கார்த்திகைத் திருநாள் அன்று அந்தக் குப்பை குழிக்குத் தீபம் ஏற்றி வழிபட்டனர். அங்கு எழுந்தருளித் தமக்கு அருள் பாலிப்பவளைக் குப்பை நாச்சியார் என்று அழைத்தனர்.

வேளாண்மைத் தொழிலில் விதைக்கு இந்திரன், மழைக்கு மாரி, ஏறி, குளம் கண்மாய்க்கு ஐயனார், கலப்பைக்குப் பலராமன், உழும் கலப்பை மற்றும் நெல் குத்தும் உலக்கைக்கு வராகி மற்றும் உரத்துக்கு தவ்வை எனப்படும் குப்பை நாச்சியாரை வணங்குவதைத் தமிழர்கள் தமது வேளாண் மரபாகக் கொண்டிருந்தனர்.

## உரத்துக்குரிய குப்பை நாச்சியார் தவ்வை

மருத நிலத்தில் வாழ்ந்த வேளாண் பெரு மக்கள் மண்ணிற்கு மேலும் வளம் ஊட்ட மாட்டு சாணம், இலை, தழை, ஆட்டுப் புழுக்கை, போன்ற இயற்கை கழிவுப் பொருட்களை நிலத்திற்கு உரமாகப் போட்டனர். அன்றாடம் கூட்டிப்பெருக்கும் குப்பை கூளங்களை குழியிலிட்டு கழிவுநீரைப் பாய்ச்சி தொழு உரமாக்கினர். இதுவே மக்களுக்கு அன்று கிடைத்த இயற்கை உரமாகும். இதனால் மணிச்சத்து உரம் கிடைக்கும். எனவே மக்கள் குப்பைக்கு அதிக முக்கியத்துவம் வழங்கினர். குப்பைக் குழியை உரக்குழி என்ற வகையில் தெய்வமாகப் போற்றினர்.

தவ்வை குப்பையைக் கூட்டி அள்ளப் பயன்படுத்தப்படும் விளக்குமாறை [துடைப்பத்தை] தன் கையில் வைத்திருப்பாள். கூட்டிய குப்பையை அள்ளிச் செல்ல பொதி சுமக்கும் கழுதையையும் கொண்டிருப்பாள். இறைவன் அளித்த இயற்கைத் தூய்மையாளராக விளங்கும் காகத்தை தமது கொடியில் வைத்திருப்பாள். அருகில் காளையனைப் போன்ற குமாரனையும் கலையழகு பொருந்திய ஒரு குமாரத்தியையும் வைத்துக்கொண்டு அமர்ந்த நிலையில் காட்சி தரும் தவ்வை மூத்தவள் ஆவாள். தவ்வை என்று சங்க

இலக்கியத்தில் குறிப்பிடப்படும் இவளைப் புராணிகர்கள் வடமொழியில் ஜேஷ்டா தேவி என்று அழைப்பர். பாற்கடலைக் கடையும் போது முதலில் தோன்றியவள் என்பதால்



இவளை மூத்தவள் என்றும் மூ[த்த] தேவி என்று சுருக்கமாகவும் அழைத்தனர். இவள் மண்ணுக்கு உரமாகும் குப்பைக்கு உரியவள். அடுத்து வந்த இளையவள் ஸ்ரீ தேவி [தான்யலட்சுமி] மண்ணின் விளைச்சலால் கிடைக்கும் நெற்கதிருக்கு உரியவள். தவ்வை மண்ணுக்குத் திரும்பிப் போகும் குப்பைக்கு உரியவள் இலக்குமி மண்ணிலிருந்து வெளிவரும் கதிருக்கு உரியவள். இருவருமே வேளாண்மைக்கு முக்கியமானவர்கள்.

தவ்வை என்ற சொல் தமக்கை என்பதைக் குறிக்கும். இதன் எதிர்ச்சொல் தங்கை என்பதாகும். அவ்வை என்றால் வயதில் மூத்த பெண்மணி. இத்துடன் - ஆர் விகுதி சேர்க்கும் போது அவ்வையார் என்றாகிறது. தவ்வை என்பதும் தமக்கை என்பதும் ஒரு பொருள் தரும் இரு சொற்கள். தமக்கை என்பதில் இருந்து ‘தம்’ என்ற முன் ஒட்டு [prefix] விலக்கப்பட்டு அக்கையார், அக்கச்சி [எதிர்ச்சொல் - தங்கச்சி], அக்கம்மா என்ற சொற்கள் வந்தன. ஆக தவ்வை என்பது நல்ல தமிழ்ச் சொல்.

## தவ்வை ஆதி மனிதகுலத்தின் அக்கா-அம்மா அல்ல

தவ்வையின் உருவம் அவள் வைத்திருக்கும் பொருட்கள் அவளது செயல்பாடு ஆகியவற்றை



வராகி, தவ்வை, லெட்சுமி – காட்டுப்புதூர்

ஆராய்ந்தால் அவள் மனித குல வரலாற்றின் வேட்டைச் சமூகத்தின் பிரதிநிதியாகத் தோன்றுகிறாள். கொற்றவை கொலைத் தெய்வமாகக் காட்சி தருகிறாள். ஆனால் தவ்வை குழுவின் தலைவியான அக்காளாக விளங்குகிறாள். இன்றும் மலை வாழ் மக்களிடம் அச்சமூகத்தின் மூத்த பெண்ணை அக்கா என்று அழைக்கும் பழக்கம் தான் இருக்கிறதே தவிர

அம்மா என்பதில்லை. தவ்வை தாய்த்தெய்வத்துக்கும் முறப்பட்ட சமூகப் பிரதிநிதி ஆவாள். அவளுடன் இருக்கும் காளையனான [மாந்தன் / குளிகன்] இளைஞனும், மாந்தி என்று புராணிகர்களால் அழைக்கப்படும் இளைஞியும் [மாந்தி] அவளது இனக்குழுவில் இருந்த ஆடவர் மற்றும் பெண்டிரைக் குறிக்கிறது. இவளுக்குப் பின் வந்த சமூகத்தில் தான் தாய் குழந்தைகள் என்ற உறவு முறை பேணப்படுகிறது. தாய்மையின் மகத்துவம் உணரப்படுகிறது.

## தன் இனக்குழுவைப் பாதுகாக்கும் தலைவியே தமக்கை / தவ்வை

தவ்வையிடம் குழுவினரைப் பாதுகாப்பாக ஒவ்வோரிடத்திலும் தங்க வைத்து அழைத்துச் செல்லும் பொறுப்பு இருந்ததால் அதனை நிறைவேற்றும் பொருட்களே அவளிடம் காணப்படுகின்றன. காகமும் துடைப்பமும் தூய்மைக்குத் தேவைப்படுபவை. அவளது தூமாவதி என்ற பெயர் உலகம் அழிந்த பின்பு எஞ்சியிருக்கும் புகையை குறிக்கவில்லை. குழுவாகத் தங்கியிருக்கும் இடத்தில் குப்பைகளை கூட்டி எரிப்பதால் உண்டாகும் புகையைக் குறிக்கிறது. இக்கருத்தை நாம் இன்று வரை தமிழகத்தில் பின்பற்றும் குப்பை நாச்சியார் வழிபாட்டு நடைமுறைகளில் இருந்து

மீட்டுருவாக்கம் செய்கிறோம். குப்பையில் இருந்து வரும் புகையானது, பூச்சிகளையும் அதன் முட்டைகளையும் அழித்துவிடும். கார்த்திகை திருநாள் அன்று இவளுக்கு ஏற்றப்படும் தீபமும் சொக்கப்பனை கொளுத்துதலும் அதனால் ஏற்படும் புகையும் சிறுவர்கள் சுளுந்து சுற்றுவதால் உண்டாகும் தீப்பொறியும் புகையும் பூச்சிகளை அழிக்கவே பயன்படுகிறது.

ஐப்பசி கார்த்திகை மாதத்தில் பெய்யும் அடைமழையும் கனமழையும் பூச்சிகளின் பெருக்கத்துக்கு காரணமாக அமைகிறது. எனவே புகை உண்டாக்குதல் அவசியமாகிறது. எனவே தவ்வை அல்லது அக்காள் என்பது ஆதி சமுதாயத்தின் தலைவியை குறிக்கும் சொல்லே தவிர தரித்திரம், பீடையைக் குறிக்கும் சொல் அல்ல. அக்காள், அதன் பின்பு வந்த அம்மா போன்ற சொற்களின் தலைமைத்துவக் குறியீட்டை வெறுத்த ஆணாதிக்க சமுதாயம் தமது வசைச் சொற்களில் இவ்விரு உறவுகளையும் இழிவுபடுத்தின. அதே வேளையில் தங்கை, மாமியார், கொழுந்தியாள் என்ற பெண்கள் சார்ந்த உறவுப் பெயர்களை வசைசொர்களில் பயன்படுத்தவில்லை. இக்கருத்தினாலும் அக்காள் [தவ்வை] என்ற மரபின் மேன்மையை அறியலாம்.

## உரத்துக்குரிய நாச்சியாராக உயர்ந்த தவ்வை

தவ்வையின் சிறப்பங்கள் இன்றும் வயற்காடுகளுக்கு அருகில் காணக் கிடைக்கின்றன. இவளது சிலைகளை கோயிலில் இருந்து வெளியேற்றினாலும் கூட வேளாண் மக்கள் தமது வயல்களுக்கு அருகில் வைத்துக் கொண்டனர். அதிர்ஷ்டம் கெட்டவள் இவள் முகத்தில் விழிக்கக் கூடாது என்று நம்பி தூக்கி எறியவில்லை. காரணம், இலை தழைளைக் கூட்டிப் பெருக்கி சுத்தம் செய்த செயலே உரத்துக்கு வழிகோலியது. வேளாண் சமூகம் தோன்றியதும் இத் தவ்வை எனப்படும் அக்காளை மக்கள் மறந்து ஒதுக்கிவிடவில்லை காரணம் அவள் கற்றுத்தந்த சமூகப் பாடம். குப்பைகளைக் கூட்டி எடுத்து குவித்து எரியூட்டினால் அதன் சாம்பல் மண்ணுக்கு உரமாகும்; மண்ணை வளமாக்கும்; புகை பூச்சி பொட்டுக்களை விரட்டும். இதனால் மண்ணும் வளம் பெறும்; மக்களும் நோயற்ற வாழ்க்கை வாழ்ந்து நலம் பெறுவர் என்ற அரிய கருத்தைத் தவ்வையிடம் இருந்து பெற்றதால் அவளைக் குப்பை நாச்சியாராக்கி வழிபடுகின்றனர். உரத்துக்குரியவளாக குப்பை நாச்சியார் தமிழர் மரபில் வேளாண் தெய்வங்களுள் ஒருத்தியாக உயர்ந்துவிட்டாள். ஆனால் பௌராணிகம் அவளைத் தரித்திரத்துக்கு உரியவளாக்கி அவள் முகத்தில் விழிக்கக் கூடாது என்று கோயில்

சந்நிதிகளில் அவல் சிறப்பத்தை மண்ணை நோக்கி கவிழ்த்துப் போட்டுவிட்டனர்.

## தவ்வைக்குரிய பிற பெயர்கள்

தவ்வையை நீளா தேவி, ஜேஷ்டா தேவி என்று பலவாறு அழைத்தனர். வடமொழியில் புராணிகர்கள் ஜேஷ்டா தேவி என்று அழைத்து அவளுக்கு புராணங்களில் இடமளித்தனர். ஜேஷ்டா தேவி புகை போன்றவள் உலகம் அழிந்த பிறகும் புகையாக நில்வுவாள். எனவே இவளைத் தூமாவதி என்றும் [தூமா என்றால் புகை.] தூம்ர வராகி என்றும் அழைத்தனர். சிலர் ஏழு கன்னியரில் ஒருத்தியாகவும் கொண்டு வழிபட்டு வந்தனர். தலையைச் சீவி முடிக்காமல் அப்படியே ஒற்றையாக விட்டிருப்பவள் எனபதால் இவளை ஏகவேணி [ஒற்றைச்சடையாள்] என்றும் அழைத்தனர்.

சக்தி பீடத்தின் வடிவான மேரு மலையில் ஒன்பது படிக்கட்டுகள் உள்ளன. அவற்றில் தவ்வை இரண்டாம் படிக்கட்டில் இருக்கிறாள். அதாவது நவாபரனத்தில் இரண்டாவது ஆபரணம் ஆவாள்.

## தவ்வையின் உருவ அமைப்பு

தமிழ் நிகண்டுகள் தவ்வைக்கு மா முகடி, கரிய சேட்டை, காக்கை கொடியோள்,

*பழையோள், யமி எனப் பதினாறு பெயர்களைக் குறிப்பிடுகின்றன. பல்லவர் காலத்தில் தமிழகத்தில் சிற்பக் கலை உருவாகிறது. அப்போது செதுக்கப்பட்ட தவ்வையின் சிலையில் அவள் பெரிய மார்பகங்களும் மோட்டு வயிறும் கொண்டு சற்று கால்களை அகட்டி உட்கார்ந்த நிலையில் இருப்பாள். அவளது காககொடியும் கழுதை வாகனமும் உடம் இருக்கும். ஒரு பக்கம் மாட்டுத் தலையுடன் மகன் மாந்தனும் [குளிகன்] மறு பக்கம் மகள் மாந்தியும் இருப்பர். ஒரு கையை அபய ஹஸ்தமாகவும் மறு கையில் விளக்குமாறும் வைத்திருப்பாள். அபய கரத்துடன் தோன்றுவதால் இவள் அழிவுத் தெய்வம் அல்ல; அருள் பாலிக்கும் கருணைத் தெய்வம். கொலைக்கருவி எதுவும் ஏந்தியிராத சாந்தரூபினி.*

## தமிழிலக்கியத்தில் தவ்வை

*தமிழ்க் காப்பியங்களில் தவ்வை என்ற சொல் தமக்கை மற்றும் தாய் என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது. 'கலம்புரி அகவல் தவ்வையர் [சிந்தாமணி 184], 'தாமரை தவ்வை தன்னோடும் கூடிய' [சிலம்பு 15-8o0o] என்றும் 'பட்டோள் தவ்வை படு துயர் கண்டு'' [7-1o04], தவ்வையும் தாயும் தழியினர் [பெருங்கதை 1-33]. திருக்குறளிலும் இச்சொல் [167] இடம்பெற்றுள்ளது.*



தவ்வையின் கணவன் வருண தேவன்

தவ்வை மழைக்குரிய தெய்வமான வருணனின் மனைவியாக கருதப்பட்டாள். கொற்றவைக்கு அடுத்த நிலையில் எண்ணிக்கையில் தவ்வை என்ற சொல் மூத்தவள், பழையோள் என்ற பொருளில் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

## தமிழ்நாட்டில் தவ்வை

தமிழ்நாட்டில் எட்டாம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரை அவள் வழிபடு தெய்வமாக விளங்கினாள். அவளுக்குக் கோயிலில் இடம் கொடுக்கப்பட்டிருந்தது. பின்னர் தெலுங்கு கன்னடம் உருது மலையாளம் பேசும் மன்னர்களின் ஆட்சி தமிழ்நாட்டில் நடந்ததனால் தமிழ் தெய்வமான தவ்வை

மூதேவியாக இகழ்ந்துரைக்கப்பட்டாள். பல்லவர் காலந்தொட்டு தவ்வையை வட மொழியில் ஜேஷ்டா தேவி என்று அழைத்தனர்

பல்லவர் காலத்தில் ஜேஷ்டா தேவி வழிபாடு தமிழ்நாட்டில் சிறப்பிடம்



பெற்றிருந்தது. காஞ்சி கைலாசநாதர் கோயிலில் தவ்வைக்கென தனிச் சந்நிதி இருந்தது. கோயில்களில் வட மேற்கு மூலையில் தவ்வை இடம்பெற்றாள். சைவ சமய எழுச்சிக்குப் பிறகு அம்மூலையில் உள்ள சந்நிதியில் கஜலட்சுமியை வைத்தனர். கோயிலின் வெளிச்சுற்றுக்குத் தவ்வையை இடம் மாற்றினர். நந்திவர்ம பல்லவனுக்கு தவ்வையே குல தெய்வமாக விளங்கினாள். பிற்காலச் சோழர்களும் தவ்வை வழிபட்டனர். இவர்களின் காலத்தில் கட்டப்பட்ட மேலப்பழூர் கோயிலில் தவ்வைக்குத் தனிச் சந்நிதி உண்டு. பிற்காலப்பாண்டியர் காலத்திலும் தவ்வை வழிபடு தெய்வமாக விளங்கினாள். மதுரைக்கு அருகில் திருப்பரங்குன்றத்தில் இவளுக்குக் ஒரு பெண் எழுப்பிய குடவரை கோயில் உண்டு. பாண்டிய மன்னன் மாறன் சடையனின் சேனாதிபதியான சாத்தான் கணபதியும் அவனது மனைவி நக்கன் கொற்றியும் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஜேஷ்டா தேவி எனப்படும் தவ்வைக்குக் கோயில் எழுப்பியதாக இக்கோயில் கல்வெட்டு தெரிவிக்கின்றது. எட்டாம் நூற்றாண்டில் தவ்வை வழிபாடு தமிழகத்தில் செல்வாக்குடன் திகழ்ந்துள்ளது. பவுத்தர்கள் தவ்வையைத் தமது தெய்வங்களில் ஒன்றாகக் கருதினர்.

*பத்தாம் நூற்றாண்டு வரை தவ்வையை வளமைத் தெய்வமாக வணங்கி வந்தனர். ஆறடி உயரமும் மூன்றடி அகலமும் கொண்ட தவ்வையின் சிலையொன்று மண்ணுக்குள் புதைந்த நடுகல் வடிவில் திருப்பத்தூர் அருகே மடவார் வளாகம் பகுதியில் கிடைத்தது. இன்று சந்நிதியில் தரையில் கவிழ்க்கப்பட்டிருக்கும் சிலையைக் கொண்ட உத்தரமேரூர் கோயில் கல்வெட்டொன்று தொண்டை மன்னன் பார்த்திபேந்திர வர்மன் 1148 குழி நிலம் மானியமாக தவ்வைக்கு வழங்கியதாகத் தெரிவிக்கிறது. பழனி பகுதியில் 13ஆம் நூற்றாண்டு வரை தவ்வைக்கு வழிபாடுகள் நடத்தப் பெற்றுள்ளன.*

**பழையோள் தவ்வை**

*தவ்வையின் மிகப் பழைய கோயில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். அக்கோயில் சோமாண்டார் குடி என்ற ஊரில் உள்ளது. இவ்வூர் விழுப்புரம் மாவட்டத்தில் கள்ளக்குறிச்சி அருகே உள்ளது. இங்குள்ள சோமீஸ்வரமுடையார் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள மூலவரான சிவபெருமானைக் காட்டிலும் பழைய தெய்வம் இங்கு இருக்கும் தவ்வை ஆவாள். அதாவது தவ்வையின் கோயிலில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்துள்ளனர் என்பதே வரலாற்று உண்மை.*

## கோயில்களில் ஜேஷ்டா தேவி

சிவன் கோயிலில் காணப்படும் மொத்தம் எட்டுப் பரிவார தெய்வங்களுள் ஒருத்தியாக ஜேஷ்டா தேவி என்ற தவ்வையும் இடம்பெற்றாள். சிவன் சந்நிதியின் உள் பிரகாரத்தில் பிள்ளையார், முருகன், சண்டிகேசுவரர், சூரியன், சந்திரன், பைரவர், சப்தமாதர் மற்றும் ஜேஷ்டா தேவியும் [இப்போது கஜலட்சுமி] இடம்பெற்றனர். பவுத்தர்கள் அதிகம் செல்வாக்குப் பெற்றிருந்த திருச்சி, தஞ்சை, நாகப்பட்டினம் பகுதிகளில் தவ்வைக்கு கௌயில்கள் இருந்தன என்பதை இன்றும் அதன் எச்சங்கள் வழி அறியலாம். ஜேஷ்டா தேவியை அவளது பழம்பெருமையைக் கருத்தில் கொண்டு அவளுக்கிருந்த மக்கள் செல்வாக்கினை அறிந்து பவுத்தர்கள் மற்றும் சமணர்கள் என இரு தரப்பினரும் தம்முடைய தெய்வமாகவும் வந்தனர். பக்தி இயக்கமும் சைவ சமய எழுச்சியும் இவளை மொத்தமாகப் புறக்கணித்துவிட்டன. தவ்வை ஜேஷ்டா தேவி என்ற பெயரில் தூக்கம் சோம்பல் போன்றவற்றின் தேவதையாகக் கருதப்பட்டாள். [இனி ஜேஷ்டா தேவி குறித்து வழங்கப்படும் தகவல்களைக் காண்போம்]

## புராணங்களில் ஜேஷ்டா தேவியாக தக்கவைக்கப்பட்ட தவ்வை

மூத்தவள் என்ற பொருளில் வழங்கப்படும் ஜேஷ்டா தேவியைப் பற்றி, பூர்வ காரணாகமம் மற்றும் லிங்க புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. தட்சனின் யாகத்தில் விழுந்த பார்வதி கரிந்து போய் தூமாவதியாக எழுந்தாள் என்பதும் அவள் யாகத்தில் இருந்து எழுந்த போது ஏழு உருவங்கள் எடுத்தாள்; அவற்றில் ஏழாவது தூமாவதி என்னும் கரிந்த புகை உருவம் என்றும் மூத்தவளைப் பார்வதியின் திருவுருவமாக காட்ட புராணங்கள் முயன்றுள்ளன. இதுவே அவளை வரலாற்றில் தக்க வைக்கும் முயற்சி ஆகும்.

## ஜேஷ்டா தேவியின் காயத்ரி

ஜேஷ்டா தேவியை கரிந்த உருவத்தினள்; புகை வடிவானவள், சம்ஹார தேவதை, என்ற பொருளில் காயத்ரி ஜபம் இயற்றப்பட்டது.

*ஓம் தூமாவத்யை வித்மஹி*

*ஸ்மஹாரின்யை*

*தீ மஹி தன்னோ; தூமோ ப்ரசோதயாத்*

## ஜேஷ்டாதேவியின் வேறு பெயர்களும் இயல்புகளும்

மூதேவி எனப்படும் ஜேஷ்டா தேவி அழுக்கு ஆடை உடுத்துவாள்; சீரற்ற பற்களை உடையவள்; முறம் போன்ற வயிறும் கருத்த நிறமும் விரித்த தலைமுடியும் கொண்டவள்; காகக் கொடியும் கழுதை வாகனமும் உடையவள். இவள் கலகத்தைத் தூண்டுவாள். ஜாதகத்தில் 12இல் ராகு அல்லது சுக்கிரனும் புதனும் சேர்ந்து இருந்தால் இந்த ஜாதகரிடம் மூதேவி குடிகொண்டிருப்பாள். இவளைத் தூமாவதி, தூம்ர வராகி, யமி, ஏக வேணி என்று பல பெயர்களால் அழைப்பர்.

ஜேஷ்டா தேவி தூமாவதியான பின்னர் இவளுக்கு வேறு சில இயல்புகளும் கதைகளும் சேர்க்கப்படுகின்றன. பிரளயத்துக்கும் பாழ் என்ற நிலைக்கும் இடையிலான வெற்றிடத்துக்கு உரியவள் தூமாவதி. தச மகா வித்யை என்ற பத்துப் பேரில் ஏழாவதாக இவள் இருக்கிறாள். விஷ்ணுவின் யோக மாயையாகவும் தூமாவதி கருதப்படுகிறாள்.

தூம்ர வராகி என்ற பெயரில் இவளைக் குறிப்பிடும் போது இவளது பிறப்பிடம் பூபுரம் எனப்படும் பதினாறாவது ஆவரணம் ஆகிறது. இவள் சிந்தாமணி கிருகத்தின் நுழைவு வாயிலில்

*காவல் தெய்வமாக இருப்பாள். பௌர்ணமியில் இரவு எட்டும் முதல் பத்து மணிக்குள் இவளுக்கு பூஜைகள் செய்ய வேண்டும். தேய்பிறை பஞ்சமி இவளுக்குரிய திதி ஆகும். உகந்த உணவு சர்க்கரைவள்ளிக் கிழங்கு. தூம்ர வராகியை ஜேஷ்டா தேவியுடன் இணைக்காமல் வராகியின் பண்பு நலங்களுக்குள் கொண்டு வருகின்றனர்.*

## ஜேஷ்டா தேவியை வழிபட ஏற்ற நாட்கள்

*ஜேஷ்டா தேவிக்குரிய மாதம் ஆனி மாதம் ஆகும்; நட்சத்திரம் கேட்டை; கேட்டை நட்சத்திரத்தில் ராகு காலத்தில் வணங்கலாம். ஆனி மாதத்தின் தே பிறை சதுர்த்தசி, அமாவாசை, பிரதமை ஆகிய நாட்களில் சிறப்புப் பூசைகள் நடத்தலாம். ஒரே நாளில் மூன்று நட்சத்திரங்கள் வரும் திரிதின நட்சத்திர நாளில் அல்லது மூன்று நாட்களுக்கு ஒரே நட்சத்திரம் வரும் நாளில் ஜேஷ்டா தேவியை வழிபாடு செய்வது சிறப்பான பலன்களைத் தரும்.*

## ஜேஷ்டா தேவி இருக்கும் கோயில்கள்

*திருக்கொண்டிசுவரத்தில் உள்ள பசுபதிச்வரர் கோயிலில் ஜேஷ்டா தேவி அனுக்கிரக தேவதையாக இருக்கிறாள். பக்தர்கள் வழிபட்டு அவள் அருளைப் பெறுகின்றனர். காஞ்சி கைலாசநாதர் கோயிலில் தனி சந்நிதி*

கொண்டுள்ளாள். செங்கல்பட்டுக்கு அருகில் வல்லம் வசந்திசுவரம் என்ற ஊரில் உள்ள கோயிலில் ஜேஷ்டா தேவிக்கு சிலை உள்ளது. உள்ளாவூரில் உள்ள அகஸ்தீஸ்வரர் கோயிலில் ஆராதனையின்றி ஜேஷ்டா தேவி சிற்பம் காணப்படுகிறது. வாரணாசியிலும் அஸ்ஸாம், கௌஹாத்தியிலும் ஜேஷ்டா தேவிக்கு கோயில்கள் உள்ளன. காஷ்மீரில் தூம்ரா காளி என்ற பெயரில் கோயில் கொண்டுள்ளாள். திருப்பதியில் நீளாதேவி என்ற பெயரில் இத்தெய்வத்துக்கு நீளாத்ரி மலையில் கோயில் உண்டு.

திருவாரூர் தியாகராஜர் கோயிலில் கமலமுனிச் சித்தர் பீடத்தின் வாயிலில் ஜேஷ்டா தேவி சிலை உள்ளது. பெரணமல்லூர் திருக்கரேசுவரர் கோயிலில் , திரு ராமசமுத்திரம் வாலீசுவரர் கோயிலில் திருமுக்கூடல் அக்த்திசுவரர் கோயிலில், மோகனூர் அசலதிச்வரர் கோயிலின் திருச்சுற்றுப் பகுதியில் இச்சிலை வைக்கப்பட்டுள்ளது. திருவானைக்காவில் உள்ள ஜம்புகேஸ்வரர் கோயிலில் சனிஸ்வரன் வைக்கப்பட்டு ஜேஷ்டா தேவிக்குச் செய்யப்படும் பூஜை சனிச்வரனுக்குச் செய்யபடுகிறது. கும்பகோணம் கும்பேசுவரர் கோயிலில் மங்களாம்பிகை சந்நிதிக்கு வடமேற்கே சிலை வைக்கப்பட்டுள்ளது. திருச்சி

உய்யக் கொண்டான் மலையில் உஜ்ஜிவன நாதர் கோயிலில் வித்தியாசமான உருவ அமைப்பில் ஜேஷ்டா தேவி சிலை காணப்படுகிறது. சேலம் சுகவனேஸ்வரர் கோயிலில் தென்மேற்கு மூலையில் ஜேஷ்டா தேவி தனிக்கல்லாகக் காட்சி தருகிறாள். கடலூருக்கு அருகே உள்ள ஒரையூர் சிவன் கோயிலில் ஜேஷ்டா தேவி சிலை இடம் பெற்றுள்ளது. தஞ்சைக்கு அருகில் உள்ள குளித்தலையில் சிவன் கோயிலில் ஜேஷ்டா தேவி சிற்பம் காணப்படுகிறது. நாகை மாவட்டம் மயிலாடுதுறை தாலுகாவில் வழுவூர் வீரட்டானேஸ்வரர் கோயிலில் மேற்கு சுற்றில் தென் மேற்கு மூலையில் பீடத்தில் ஜேஷ்டா தேவி எழுந்தருளி உள்ளாள். இச்சிற்பம் பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

## செல்வநாயகி தவ்வை

எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தவ்வையின் சிற்பங்கள் பெரும்பாக்கம், தென் சிறுவலூர், பேரங்கியூர் ஆகிய ஊர்களில் காணக் கிடைக்கின்றன. இச்சிற்பங்களில் அவள் தரித்திரம் பிடித்தவள் கிடையாது. பணப் பேழையுடன் காணப்படும் செல்வநாயகி.

## தவ்வையின் குழந்தைகள்

தவ்வை அல்லது ஜேஷ்டா தேவியின் அருகில் காணப்படும் இருவரை அவளது

பிள்ளைகள் என்பதும்; மகன் மாந்தன் என்பதும் மகளை மாந்தி என்பதும் அவர்களும் தாயைப் போலச் சோம்பேறி எனக் கொள்வதாகும். சிலர் தவ்வையின் மகனை குளிகன் என்று நல்ல செயல்களுக்குரியவனாகக் கருதுகின்றனர். இவன் மாட்டுத்தலை உடையவனாக சிலை வடிக்கப்பட்டுள்ளான். இவனை காளையன் எனக் கொண்டு வேளாண் தொழிலில் உழவுமாடு வண்டி மாடு போன்ற காளையாகக் கொள்ள வேண்டும். தவ்வை வேட்டை சமுகத்தின் ஆதி தலைவி அதாவது அக்காள். அவள் தாய்த் தெய்வம் கிடையாது; அதற்கும் முந்திய தலைமை தெய்வம். வேளாண் மரபினர் அவளது தொன்மையைப் போற்றி உரத்தின் மேன்மை கருதி அவளைக் குப்பை நாச்சியாராகக் கொண்டு வயல் வெளிகளில் அவளது சிலையை வைத்து வணங்கினர்.

தொல்லியல் ஆய்வுத் துறையினர் தவ்வை அலல்து ஜேஷ்டா தேவியின் சிலைகளை வைகை, காவிரி மற்றும் பாலாற்று பகுதிகளில் மருத நிலத்தில் கண்டறிந்துள்ளனர். இவற்றை அருங்காட்சியகங்களில் கொண்டு சேர்த்தனர். தவ்வை இனக்குழுச் சமுதாயத்தின் முதல் தலைவி ஆவாள். வேளாண் சமுதாயத்தினர் போற்றிய உரத்துக்குரிய தெய்வமும் ஆவாள். அவளுடன் இருக்கும் ஆணும் பெண்ணும்

இனக்குழுவின் ஆண் பெண் பிரதிநிகள் ஆவர். அவளிடம் இருக்கும் பொருட்கள் அவளது குழுவினரைப் பாதுகாக்க உதவியவை ஆகும். அவள் கூட்டிச் சேர்த்து எரிக்கும் குப்பையும் புகையும் வேளாண்மைச் சமூகத்திற்கு விலை மதிப்பில்லா உரம் ஆகும். மக்களுக்கு மண்வளம் காக்கும் மணிச்சத்து ஆகும்.



நூல் ஆசிரியரின் பிற நூல்கள்

## நூல் பற்றி

தெய்வங்கள், புராணங்கள், வரலாறு, இந்த மூன்றையும் ஒரே சரடில் கோர்த்து இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகளையும் ஒற்றுமைகளையும் அநாயாசமாக ஆராயும் திறமை பெற்றவராக விளங்குகிறார், முனைவர் செ. இராஜேஸ்வரி அவர்கள்.

. . . ஆய்வுக் கட்டுரைகள் எங்கோ பல்கலைக் கழகங்களிலும், பயிலரங்கங்களிலும், கருத்தரங்கங்களிலுமே வாசிக்கப்பட்டும் நூலாக்கப்பட்டும் நூலகத்தின் ஓரத்தில் பொது ஜனங்களின் பார்வைக்கு படாமல் ஒதுங்கி நிற்கும் எனும் விஷயத்தை இவரது கட்டுரைகள் உடைத்துப் போட்டதை அனுபவப்பூர்வமாக உணர்ந்தேன்.

. . . இது போன்ற நூல்கள் இளைஞர்களின் கரங்களுக்குச் செல்ல வேண்டும். திருமணமோ அல்லது பிறந்தநாள் பரிசு கொடுப்போர்கள் இம்மாதிரி நூல்களைப் பரிசளிக்கலாம்..

**கிருஷ்ணா** - பொறுப்பாசிரியர் ஆன்மிகம்

₹ 200/-